# அரசினர்
# சித்த மருத்துவக் கல்லூரி
## பாளையங்கோட்டை
## திருநெல்வேலி - 627 002

# GOVT. SIDDHA MEDICAL COLLEGE
## PALAYAMKOTTAI — TIRUNELVELI - 627 002.




# ஆண்டு மலர்
# 1988 – 1989

# மலர்க் குழு

**தலைவர் :**

Dr. V. சுப்பிரமணியன், M.D. (s),
முதல்வர்.

**ஆசிரியர் செயலர் :**

Dr. G. கணபதி, M.D. (s)
இணைப் பேராசிரியர்.

**ஆசிரியர் பொருளாளர் :**

Dr. V. சுப்புலட்சுமி, M.D. (s)
பேராசிரியர்.

**மாணவர் செயலர் :**

திரு. M. கோலப்ப பிள்ளை,
நிறைவாண்டு பி. எஸ். எம். எஸ்.

**உறுப்பினர்கள் :**

Dr. R. S. இராமசுவாமி, III M.D. (s)
திரு. G. குமார ராஜா, இறுதியாண்டு B.S.M.S.
செல்வி S. இந்திரா ,, ,,
திரு. T. பாபு ,, ,,
செல்வி S. ஜோதிமீனாட்சி ,, ,,
திரு. P. அரவிந்தன் IV B.S.M.S.
திரு. A. முனீஸ்வரன் ,,
திரு. K. P. கண்ணன் III B.S.M.S.
செல்வி M. ரோஸலின் ,,
திரு. R. சிவசக்திவேலன் II B.S.M,S.
செல்வி S. கல்யாணி ,,
திரு. T. சந்திரசேகரன் I B.S,M.S.
செல்வி S. மலர்விழி ,,
திரு. N. K. தில்லை நடராஜன், II D. Pharm.
திரு. P. நாகராஜன், I D. Pharm.

CMS அச்சகம், 61, திருச்செந்தூர் ரோடு, பளையங்கோட்டை.

இனிய உள்ளங்களுக்கு !

இளையவனின் வணக்கங்கள்.

சித்த மருத்துவச் சோலையில் பூக்கின்ற இந்த புத்தம் புது மலரை உங்கள் கரங்களில் மலர விடுவதில் மகிழ்ச்சியடைகிறேன். நமது கல்லூரியின் இருபத்தைந்து ஆண்டுக்கால கல்விப் பணியை எண்ணிப் பார்க்கும் போதே உள்ளம் பெருமிதத்தில் விம்முகிறது. தமிழோடு பிறந்து, தமிழாய் வளர்ந்த நம் சித்த மருத்துவம் இன்று தமிழருக்கே பெருமை தரும் தனிப் புகழுடையதாக உள்ளது. ஆதி சித்தன் சிவனில் தொடங்கி அவர் வழி வந்த அத்தனை சித்தருக்கும் நாம் தலை வணங்குவோம்.

கால் நூற்றாண்டு கால வளர்ச்சியில் ஆல் போல் தழைத்து நிற்கும் நம் கல்லூரியின் ஆண்டு மலர் இது. இம்மலரில் சித்த மருத்துவ அறிஞர் பெருமக்கள், மருத்துவ ஆசிரியப் பெருந்தகையர், மாணவர்கள் முதலியோரது கட்டுரைகள், கவிதைகள் இன்ன பிற இடம் பெற்றுள்ளன.

சித்த மருத்துவத்தின் சிறப்புக்களை உலகுக்கு சீர்பெற உரைக்க வேண்டும் என்பதை கருத்தில் கொண்டே இம் மலர் தயாரிக்கப் பட்டுள்ளது. இம்மலருக்கு கட்டுரைகள், கவிதைகள், ஓவியங்கள் தந்த அத்தனை பேருக்கும் எனது நன்றிகள்.

இம் மலர் மணம் வீசி மலர உதவிய கல்லூரி முதல்வர் Dr. V. சுப்பிரமணியன் M.D(s) அவர்கள், துணை முதல்வர் Dr. K. பலவேசம் M.D(s) அவர்கள், மலர்க்குழுவின் ஆசிரியர் செயலர் Dr. G. கணபதி M.D(s) அவர்கள், ஆசிரியர் பொருளாளர் Dr. V. சுப்புலட்சுமி M.D(s) அவர்கள், மற்றும் என்னோடு கரம் சேர்த்து உழைத்த மலர்க்குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.















இம் மலரில் இடம் பெறும் படைப்புகளை தேர்வு செய்ய உதவிய Dr. G. கணபதி M.D(s) அவர்கள், Dr. V. சுப்புலட்சுமி M.D(s) அவர்கள், Dr. P. செயப்பிரகாசு நாராயணன் M.D(s) அவர்கள், Dr. R.S. இராமசுவாமி, final M.D.(s) திரு T. பாபு மற்றும் செல்வி. S. ஜோதி மீனாட்சி நிறைவாண்டு B.S.M.S. ஆகியோருக்கு என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

இம்மலரில் விளம்பரம் செய்து உதவிய வர்த்தக பெருமக்களுக்கும், வாழ்த்துச் செய்திகள் அளித்த பெரியோர்களுக்கும், பல வகைகளிலும் உதவிக் கரம் நீட்டிய வணக்கத்திற்குரிய ஆசிரியப் பெருமக்களுக்கும் உயிரினும் மேலான மாணவ, மாணவியருக்கும் என் நன்றிகளைக் காணிக்கையாக்குகிறேன்.

இம் மலரை சீரிய முறையில் அச்சிட்டு உதவிய C.M.S. அச்சகத்திற்கும், புகைப்படங்கள் எடுத்து உதவிய கிங் ஸ்டுடியோ உரிமையாளர் திரு. துரை ராஜ் அவர்களுக்கும், பிளாக்ஸ் அமைத்து உதவிய திரு. சங்கர நாராயணன் (தேவிப்ளாக்ஸ்) அவர்களுக்கும் எனது நன்றிகள்

இம் மலரின் முகப்பு அட்டையை அழகுற அமைத்து தந்த எங்கள் பெருமைக்குரிய மாணவி செல்வி. லதாராணிக்கு மலர்க் குழுவின் மனமார்ந்த நன்றிகள்.

குறுகிய இடைவெளியில் தொடுக்கப்பட்ட இம்மலரில் குறைகள் தென்படின் நிறைந்த அறிவுடைய பெரியோர்கள் மன்னித்து அருள வேண்டுகிறேன்.

'சித்த மருத்துவமே சிறந்த மருத்துவம்' என்ற செய்தியைத் தாங்கி இந்த மலரின் பயணம் தொடங்குகிறது. வெற்றி பெற வாழ்த்துங்கள்.

இவண்,
நன்றியுடன்,
**மா. கோலப்பபிள்ளை**
மலர்க்குழுச் செயலர்.



மேதகு ஆளுநர்

**P. C. அலெக்சாண்டர் அவர்கள்**



மாண்புமிகு முதலமைச்சர்

**டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி** அவர்கள்



மாண்புமிகு கல்வியமைச்சர்
**க. அன்பழகன்** அவர்கள்



மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை
அமைச்சர் **டாக்டர். க. பொன்முடி** அவர்கள்



**Dr. V. சுப்பிரமணியன்** M.D (s).,

கல்லூரி முதல்வர்.



**Dr. கந்த. பலவேசம் M.D (s) அவர்கள்**

துணை முதல்வர்

க. அன்பழகன், எம். ஏ.
கல்வி அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை -600 009
நாள் 29 . 09 . 1989

# வாழ்த்து

பாளையங்கோட்டை, அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி, 1989—ஆம் ஆண்டின் — கல்லூரி மலரை வெளியிட இருப்ப தறிந்து மகிழ்கிறேன்.

இந்தக் கல்லூரி — சித்த மருத்துவம் பயிலும் மாணவர் களுக்குத் தகுந்த தேர்ச்சியளித்துப் பட்டதாரிகளாக வெளிவரச் செய்யும் பணி பாராட்டத்தக்கது.

மருத்துவ முறைகளும், நோய்நாடும் வழிகளும் பலவாயினும், தமிழ் மண்ணிற்கே உரியதாகத் தோன்றிட்ட பல சிறப்புகளுக்கு உரியதாக விளங்கும் சித்த மருத்துவத்தின் பயனை, மக்கள் தெளியும்படிச் செய்வது இத்துறை மருத்துவர்களின் கடமை யாகும்.

நாட்டு மருத்துவம் - வீட்டு வைத்தியம் முதல் -நாடி அறிதல் வர்மக்கலை, மூலிகை மருத்துவம், இயற்கை வைத்தியம், வரை - உள்ள பல கூறுகளும் மக்களுக்கு பயன்படும் வண்ணம் வளர்க் கப்படவேண்டும் என்பது என் அவா.

சித்த மருத்துவத்தின் சிறப்பு ஓங்க, பாளையங்கோட்டை கல்லூரியின் வளர்ச்சி துணை செய்யட்டும். வளர்க சித்த மருத்துவம்!

(ஒ . ம்)

**(க. அன்பழகன்)**

கல்வி அமைச்சர்.

**Dr. M. G. R. MEDICAL UNIVERSITY, TAMIL NADU**
**'PERIYAR BUILDING'**
No. 52, E. V. K. Sampath Salai, Vepery, Madras — 600 007.

**Dr. LALITHA KAMESWARAN**
M. B. B. S., Ph. D. (London). F. C. A. I., F. A. M. S.
Vice - Chancellor

RES :
Door No., 5, Plot No. : 458.
III Avenue, Indira Nagar,
Madras — 600 020
Phone : 411879 416575
PHONE : O) 32629

*Dated : 6 — 9 — 8*

*Dear Thiru Kolappa Pillai,*

*Thank you very much for your kind letter informing me of your plans to release the annual college magazine. I wish you success in your endeavour. Those who are undergoing a course in any one of the traditional systems of medicine should cultivate the habit of approaching their science with an open mind and with a readiness to experiment and carry out further research to re - validate the observations of our ancient seers and Siddhars. Such a sustained effort alone will improve the image of the practitioners of this system. The magazine should collect articles of general academic interest, like methodology of research and comparative studies on modern & ancient techniques and their advantages.*

*With warm regards,*

*Yours Sincerely,*

*Sd/- Lalitha Kameswaran*

Chaturvedi Badrinath, I. A. S.,
Director of Indian Medicine
& Homoeopathy,

Arumbakkam,
Madras 600 106,
26th September 1989

*Indian traditions of medicine, of which Siddha is to be found in Tamilnadu alone. were based on a completely scientific understanding of the relation between the body and the mind Their approach to disease and illness was not fragmentary but was rooted in the view that all illness is only imbalance in human system*

*I congratulate the students of the Government Siddha Medical College. Palayamkottai, at bringing out a magazine. I sincerely hope that this magazine will grow into a forum of serious debate about the historical and scientific background of the Siddha system of medicine.*

*Sd. | —*

*Chaturvedi Badrinath, I. A S.,*

**Dr. K. V. Vaitheeswaran, M. D. (s)**
*Joint Director of*
*Indian Medicine and Homoeopathy.*

*Arumbakkam,*
*Madras — 106,*
*25 - 9 - 89.*

Sir,

*I am glad to know that our College Magazine has been brought out this year after a long gap of ten years. I hope this magazine will carry a good message throughout the world about the glory of Siddha System of Medicine. I congratulate the efforts being made by the Editor and his team and all other staffs for this endeavour.*

*I wish all success for this College Magazine Committee.*

*Yours Sincerely*

Sd/- K. V. Vaitheeswaran



**Dr. G Ganapathy** M.D. (s).

*Staff - Editor.*



**M. Kolappa Pillai,** Final B.S.M.S.

*Student Editor & Secretary.*



**Dr. (Tmt.) V. Subbulakshmi,** M.D.(s)

*Staff - Treasurer.*

## உள்ளே ... ...

பக்கம்



...ாணவர்கள் ...ணம்
...ளவுக்கு முன்னே...

இக் கல்லூ...
...வமனை 108 ...
...ன் 208 ஆக...
...யர்த்தப்பட்டு ...ப் பகுதி
...சதிகளுடன் செ...

1973 ல் மத்திய அரசின் ஆதரவுடன் மருத்...வம், குணபாடம் ஆகிய இரு பிரிவுகளில் ...ம். டி. பட்ட மேற்படிப்பு துறை துவங்

... அதி ...த்திரை ...களுக்கு ...இயக் ...முடியும் ...தே இவ் வுடை...த்திரையாகும்.

இம் மருத்துவமனையில் பயன்படுத்தப் படும் மருந்துகள் யாவும் இங்குள்ள மருந்து செய் நிலையத்திலேயே தயார் செய்யப்படு வனவாகும், மூலிகை முதல் தாது, பாடாண,

# முதல்வர் பேசுகிறார்

**Dr. V. சுப்பிரமணியன் M. D (s)**
கல்லூரி முதல்வர்

1964 ல் துவக்கப்பட்டு இன்று வெள்ளி விழா ஆண்டினை எட்டிப் பிடித்திருக்கும் இக் கல்லூரி இடைப்பட்ட இருபத்தைந்து ஆண்டுகளில் பெற்றிருக்கும் வளர்ச்சி மிகப் பெரிது. ஓட்டுக் குடிசைகளிலே துவங்கப்பட்ட இக் கல்லூரி தற்பொழுது பல மாடிக் கட்டிடங் களைப் பெற்று முழு வளர்ச்சியடைந்த மருத்துவக் கல்லூரிகளிலே ஒன்றாகத் திகழ்ந்து வருகிறது. இக் கல்லூரியில் பணிபுரியும் முதல்வர் முதல் அனைத்து ஆசிரியர் பெருமக் களும் இக் கல்லூரியிலே உருவாக்கப்பட் டவர்கள் என்ற பெருமையுடன் இன்றைய சித்த மருத்துவ ஆய்வு நிலையங்களின் தலைவர் களாகவும் பல்கலைக் கழகங்களில் சித்த மருத் துவத் துறைத் தலைவராகவும், இந்திய மருத்துவ துறையின் இணை இயக்குநராகவும் விளங்குபவர்கள் இக் கல்லூரியின் படைப்புக் களே என்ற பெருமையையும் உடையது இக் கல்லூரி அது மட்டுமல்லாமல் மத்திய ஆயுர் வேத சித்த மருத்துவ ஆய்வு கழகத்தின் கீழ் செயல்படும் சித்த மருத்துவ அறிவியல் ஆய்வுக் குழுவின் தலைவராகவும் உறுப்பினர்களாவும் இருப்பவர்களும் இந்திய முறை மருத்துவக் கல்லூரிகளின் பாடத்திட்டத்தை வகுக்கும் மற்றும் இந்திய மருத்துவப் பட்டதாரிகளின் பதிவுகளை முறைப்படுத்தும் பணிகளை செய்கின்ற இந்திய மருத்துவ மத்திய சமுகத் தின் உறுப்பினர்களில் ஒருவராகத் திகழ் பவரும் இக் கல்லூரியின் பட்டதாரிகளே ஆகும். துவக்கத்தில் 30மாணவர்கள் கொண்டு துவக்கப்பட்ட இக் கல்லூரி பின் நாற்பத்து நான்காகவும் பின் எழுபத்து ஐந்தாகவும் கூட்டப்பட்டு தற்பொழுது ஆண்டிற்கு 100 மாணவர்கள் சேர்க்கப்பட்டு கல்வி பயிலும் அளவுக்கு முன்னேற்றம் கண்டுள்ளது.

இக் கல்லூரியுடன் இணைந்த மருத் துவமனை 108 படுக்கைகளுடன் துவங்கப்பட்டு பின் 208 ஆகவும் அதன் பின் 232 ஆகவும் உயர்த்தப்பட்டு தற்பொழுது 250 படுக்கை வசதிகளுடன் செயல்பட்டு வருகிறது.

1973 ல் மத்திய அரசின் ஆதரவுடன் மருத் துவம், குணபாடம் ஆகிய இரு பிரிவுகளில் எம். டி. பட்ட மேற்படிப்பு துறை துவங் கப்பட்டது. இதற்கு பின்னர் 1987 ல் சிறப்பு மருத்துவம், குழந்தை மருத்துவம் ஆகிய இரு பிரிவுகளில் பட்ட மேற்படிப்பு துறை விரிவுபடுத்தப்பட்டது.

மத்திய இந்திய மருத்துவக் கழகத்தால் பரிந்துரைக்கப்பட்ட 12 துறைகளும் இங்கு மாநில அரசினால் ஏற்படுத்தப்பட்டு அதற்காக பேராசிரியர் முதலான ஆசிரியர் பணிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இவை தவிர இக் கல்லூரியில் இரண் டாண்டு மருந்தாளுநர் பட்டயப் பயிற்சிஒன் றும் செயல்பட்டு வருகிறது. ஆண்டிற்கு 50 மாணவர்கள் இப்பயிற்சியில் சேர்க்கப்பட்டு வருகிறார்கள்.

மருத்துவமனையில் மருத்துவப்பாடங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி வெளிநோயாளர் பகுதிகளும், உள் நோயாளர் பிரிவுகளும் செயல்பட்டு வருவதோடு இங்கு பணிபுரியும் மருத்துவர்களின் முயற்சி மற்றும் ஆர்வத்தின் காரணமாக ஐந்து சிறப்பு வெளிநோயாளர் பகுதிகளும் செயல்பட்டு வருகின்றன. இரத்த அழுத்த நோய், மது மேக நோய், யோகா, தொழு நோய், புற்று நோய் ஆகிய நோய் பிரி வுகளில் செயல்படும் இச்சிறப்பு வெளி நோயா ளர் பகுதிமக்களால் கவரப்பட்டுள்ளன. இச் சிறப்பு வெளி நோயாளர் பிரிவுகள் மேலும் வளர்ச்சியடைந்து வசதி வாய்ப்புகள் ஏற்படும் சமயம் ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு பெரிய மருத்துவமனையுடன் கூடிய ஆய்வு நிலையமாக வளர்ச்சியடையும் காலம் வெகு தொலைவில் இல்லை என்றேகூறலாம்.

இத்துடன் நோய் எதிர்ப்பு சக்தியை அதி கப்படுத்தும் சித்த மருத்துவ உரை மாத்திரை ஒன்று தயார் செய்யப்பட்டு குழந்தைகளுக்கு வழங்கப்பட்டு வருகிறது. நோய் தடுப்பு இயக் கத்தில் சித்தமருத்துவமும் பங்கு பெற முடியும் என்பதற்கு சான்றாக விளங்குவதே இவ் வுரை மாத்திரையாகும்.

இம் மருத்துவமனையில் பயன்படுத்தப் படும் மருந்துகள் யாவும் இங்குள்ள மருந்து செய் நிலையத்திலேயே தயார் செய்யப்படு வனவாகும், மூலிகை முதல் தாது, பாடாண,

சீவ வகைகளிலான மூலப் பொருட்களைக் கொண்டும் செய்யப்படும் மருந்துகள் இம்மருத்துவமனையில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. தாது, பாடாணங்களைக் கொண்டு செய்யப்படும் பற்ப செந்தூரங்கள் சித்த மருத்துவத்திற்கு பெருமைசேர்க்கும் மருந்துகளாகும். எனினும் உடலுக்கு கேடு விளைவிக்கும் மருந்துகள் இவை என்று இதன் விபரம் தெரியாத சிலரால் பரிகாசிக்கப்பட்டும் வருகிறது. தாது, பாடாணங்களை சரியான முறையில் தூய்மை செய்து உரிய தாவர சரக்குகளைக் கொண்டு அதை அரைத்து பக்குவப்படுத்தி எரித்து எடுக்கப்படும். இம் மருந்துகள் தக்க அளவில் தக்க அனுபானத்தின் நோயாளிகளுக்கும் கொடுக்கப்படும் பொழுது அது சரியான முறையில் நோயைக் குணப்படுத்துமேயல்லாமல் எந்த வித தீங்கும் எற்படுத்தாது 1964ல் இங்கு மருத்துவமனை துவங்கப்பட்ட காலம் முதல் இம் மருந்துகள் இங்கு பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சென்னையில் உள்ள இம்ப்காப்ஸ் நிறுவனம் வருடத்திற்கு கோடிக்கணக்கான ரூபாயளவுக்கு இம் மருந்துகளை உற்பத்தி செய்து மக்களுக்கு விநியோகம் செய்து வருகிறது. தாது பாடாண மருந்துகளா? வேண்டாம். அவை பிருக்கத்திற்கு கேடு விளைவிக்கும் என்ற தவறான பிரச்சாரம் செய்து வருபவர்கள் எந்த ஆய்வினை அடிப்படையாகக் கொண்டு சொல்கிறார்கள் என்பது தெரியவில்லை. எங்கோ ஒரு சிலர் தவறான முறையில் செய்யப்பட்ட மருந்துகளினால் வேண்டுமானால் கேடுகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனல் முறை தவறாமல் செய்யப்பட்ட இத் தாது பாடாண மருந்துகள் தான் இன்று சித்த மருத்துவத்தின் சிறப்பான மருந்துகளாக கையாளப்பட்டு வருகின்றன.

இவை தவிர தற்பொழுது இம் மருந்துகளைக் கொண்டு நவீன மருத்துவ ஆய்வு நிலையங்களில் முறையான ஆய்வுகள் செய்யப்பட்டு அதன் பெருமைகள் கண்டறியப்பட்டு வருகின்றன.

சித்தர்களின் வேதியல் திறமையை பறைசாற்றுகிற இம் மருந்துகளைப் பற்றிய ஆய்வுகள் மேலும் பல நிலையங்களில் செய்யப்பட வேண்டும். இதற்கென தனியான ஆய்வு நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டு இம் முறைகள் துவக்கம் முதல் இறுதி வரை ஒவ்வொரு படியாக ஆய்வு செய்யப்படுமானால் நவீன மருத்துவ உலகமே அதிசயிக்கத் தக்க பல உண்மைகள் வெளிப்பட வாய்ப்புண்டு.

இந்திய முறை மருத்துவம் பற்றிய கருத்தரங்குகள் எங்கு நடைபெற்றாலும் நமது மருத்துவர்கள் அங்கு ஆர்வமுடன் பங்கேற்று ஆராய்ச்சிக் கட்டுரைகளை சமர்ப்பித்து வருகிறார்கள். நமது கல்லூரியிலிருந்து படைக்கப்பட்ட பல ஆய்வுக்கட்டுரைகள் அகில இந்திய அளவில் பல பரிசுகளும் பெற்றுள்ளன என்பதையும் இத்தருணத்தில் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

நமது கல்லூரி மாணவர்கள் படிப்பில் மட்டுமல்லாமல் விளையாட்டுத் துறைகளிலும் இசை, நாடகம், நடனம்போன்ற பிரிவுகளிலும் பல்கலைக் கழக கல்லூரிகளுக்கிடையே நடைபெறும் பல போட்டிகளிலும் கலந்து கொண்டு பரிசுகள் பல பெற்றுள்ளமை பெரும் பாராட்டுதலுக்கு உரியதாகும்.

ஆசனம், பிராணாயாமம் ஆகியவை மாணவர்களுக்கு பாடத்திட்டத்தில் ஒரு பகுதியாக இருந்த போதிலும் இவற்றுள்மிகுந்த ஆர்வம் கொண்டுள்ள மாணவர்கள் பயன் பெறும் வகையில் "பதினெண் சித்தர் யோக மன்றம்" என்ற அமைப்பைத் துவங்கி வாரத்தில் திங்கள், புதன், வெள்ளி ஆகிய மூன்று நாட்களின் மாலையில் ஆசனங்கள் பற்றியும், பிராணாயாமம் பற்றியும் பயிற்சிகள் நடைபெற்று வருகின்றன என்பது பெருமைக்குறிய தாகும்.

துவக்கத்தில் நாட்டு நலப் பணித் திட்டத்தில் ஒரு பிரிவு மட்டும் செயல்பட்டுக் கொண்டிருந்த இக்கல்லூரியில் தற்பொழுது இரண்டாவது பிரிவும் சென்ற ஆண்டு முதல் செயல்பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் இத்திட்டத்தின் மூலம் கிராமங்களில் சிறப்பு முகாம்கள் ஏற்பாடு செய்யப் பட்டு நடத்துவதோடு மற்றக் கல்லூரிகளில் நடத்தப்படும் முகாம்களுக்கும் கூட துணையாக மருத்துவ முகாம் அமைத்து தந்து உதவி செய்து வருகிறது.

# "இளைஞர் நெஞ்சில் புதுமை ஒளி பொங்கட்டும்"

**S. MARIAPPAN** B.Sc.,
III B.S.M.S.

பொங்கிவரும் புதிய நதிகளாய்
எழுந்துவரும் இளந்தலை முறைகளே
இன்பங்கள் ஆயிரம் இவ்வுலகில்
அள்ளிப் பருகிடத் துடிக்கின்றன மனங்கள்
இடையிலோ துன்பங்கள் பலகோடி
அறிவீர்களா நீங்கள் ?

துன்பங்களைக் கண்டு
துவண்டு விடாதீர்கள் !
துன்பங்களையே இன்பங்களாக
மாற்றியமைப்பதுதான் வாழ்வு !
வெற்றிதான் நீங்கள் விரும்புவது
ஆயினும் , வெற்றிக்குப்
படிக்கட்டாய் வந்து விடும்
தோல்விகளைக் கண்டு , நீங்கள்
துரும்பாகி விடாதீர்கள் !
கடலிலே போய் கலந்துவிட்ட நீருக்காகக்
கங்கை கண்ணீர் விடுவதில்லை !
நிலத்தில் உதிர்ந்துவிட்ட இலைகளுக்காக
மரம் அழுவதில்லை ! — நீங்களும்
வாழ்வில் வந்துவிட்ட தோல்விகளுக்காக
முயற்சிகளை முடமாக்கி விடாதீர்கள் !
கரைகளில் மோதி
உடைகின்ற அலைகளைப்போல் —
உங்கள் கவலைகளும் — ஒரு நாள்
உடைந்து போவது உறுதி !
பாம்புகளையும் பாதங்களால்
மிதித்து நசுக்குகிற பருவம்
இளமைக் காலம் !

இளங்கன்றுகள் பயமறியலாமோ ?
வெண்ணிலவைக் கார்மேகங்கள்
நயவஞ்சகமாய் மறைப்பதுண்டு
ஆனால் வெண்மதி — அந்தக்
கறுப்பு மேகங்களை விலக்கிக் கொண்டு
உலகத்திற்கு ஒளிதர —
வெளியேவரத்தான் செய்கின்றது
பகற் பொழுதில் கதிரவன்
நட்சத்திரங்களைச் சுடத்தான் செய்கிறான்
ஆனாலும் , இரவில் அவை
வானத்தில் எழுந்து வந்து
பிரகாசிக்கத் தவறுவதில்லை !
இயற்கையின் இந்த உண்மைகளை
உணராமலா இருக்கிறீர்கள் நீங்கள்?
இளையகுருதிகளே ! என்
இலட்சிய தீபங்களே !
எத்தனை இடையூறுகள் உங்கள்
பாதையில் குறுக்கிட்டாலும்
அத்தனையும் தூளாகிவிடும் — உங்களின்
அயராத பயணத்தால் !
இளைஞர்களின் இனிய காலம் இது !
எதிர்கால ஏற்றமிகு
சமுதாயம் நம் கையில் !
எதற்கும் அஞ்சாது
இளைஞர் அணி எழுந்து புறப்பட்டால்
புதிய சமுதாயம் எனும்
பூ — மலர்வது நிச்சயம் !
புதுமை ஒளி — நம்
வாழ்க்கையிலே
பொங்குவது சத்தியம் !



# SIDDHA SYSTEM

Dr. V. ARUNACHALAM, M.D (s)
Lecturer,

## INTRODUCTION :-

The siddha system of Medicine is a unique science and it cannot be compared with any other systems of Medicine. This system is invented by the spritual scientists of Tamil Land. This system is embodied and wrapped by its own Anatomy, physiology, pathalogy and treatment. The aim of this system is to attain an "eternal bliss".

## SIDDHARS :-

The Siddhars were a class of popular writers in Tamil in all its branches of knowledge; and many of their works were written in elegant poetic style. The siddhars were the men of highly cultured intellectuals and spiritual faculties combxined with supernatural powers. They have travelled on the scientific tracts and attained supernatural powers.

## ORIGIN :-

With the help of the archeological studies of the Indus valley civilization and the excavations of Harappa and Mohenjodara frames a background to this system. The siddha science could possibly have been born in the Lemurian continent.

## AGE :-

Siddhars period was one of the intense intellectual activity period in all arts and sciences. It is believed that the period of siddhars was between 10,000 – 4400 Bc. ie – prevedic period. So, this system is called "Dravidian system of Medicine".

## INFLUENCE

There is reason to believe that during the commercial collaberation for a considerable time with Tamils in south India, the civilized nations might have also obtained information with regard to the healing art and that the influence of siddha Medicine premeated far and wide into China, Arabia, Egypt, Greece and Rome. Our ancient Materia medica works also to prove that Bogar and other siddhars acutally visited China, Arabia, Persia, Turkey and other places.

## LITERATURE :-

Siddha Literatures consists of Evoluationary theory, Fundamental Principles, and Philosophy etc. Especially Kayakalpa method, yoga practice, Alchemy, Astrology, varmam and hygeinic Principles are mentioned in elabrate manner.

## PRICIPLES

According to this Medical Science, the universe originally consisted of Atoms which contributed to the five basic elements viz: Earth, Water, Fire, Air and Ether. These Five elements are called in Tamil "ஐம்பூதம்" A single element cannot be taken into account detached from the other elements. Where there is one element, the other four elements are present in every Atom. Every element will be found in combination with other elements. These five elements are said to exist in two states, namely physical and subtle. All substance in the existing universe should possess littent kinds of characters

according to the combinations of these five elements.

According to this system the three humours namely வளி, அழல், ஐயம் are the essential factors of the human body. The increase or the decrease of these three humours or the imbalance causes diseases.

The drug has to be chosed for the treatment according to its taste *(சுவை)*, potence, *(வீரியம்)* therapeutic classification *(பிரிவு)* and property *(பண்பு)*. The physician should also count the environmental nature of the living land of the patient. The prognostic value of the patient also to be taken into consideration before a proper line of treatment is decided upon.

'Food is a medicine; Medicine is a food' As per this siddhar's theory, diet plays an important role in siddha treatment. Proper diet brings about the balance of humours and helps in healing process.

**DRUGS :-**

All drugs must be purified before using them for medicine.

**COMPATIBLE DRUGS** *(நட்புச் சரக்கு)* **:**

Drugs that are compatible with each other when they are combined with two or more drugs produce an additive pharmacological action equivalent to the summation of their individual pharmacological action.

Likewise when two or more drugs are combines they result is synergistic action causing potentiation or prolongation of the action of one drug by another.

**INCOMPATIBLE DRUGS :**

The incompatible drugs when combined together antogonise or oppose each other and reduce the therapeutic action of the drug. These are called antagonist drugs.

**PREPARATIONS :**

Siddhars have classified the medicines into two broad classification on the basis of the methods of preperation and treatment aspect. They are :-

1 Internal Medicines *(அகமருந்துகள்)*

2 External Medicines *(புறமருந்துகள்)*

Each of these two consists of 32 methods.

**EVOLUTIONARY THEORY**

This is a unique theory invented by the ancient siddhars. As per siddha science, the evolution starts with the State of emptiness or Vaccum *(வெறுமை)* and ends with the State of existance of human beings. The stages are as follows




**KAYAKALPAM :**

This is a method derived by siddhars with the aid of practice, medicine and chemical processess for retaining the body for a long period, rejuvenation and thus promoting longevity.

**YOGA :-**

Yoga is a kind of practice which is included in the siddha systems of medicine for the perfection of life. The purpose of Yoga is to prolong the life through the promotion of the health of the individual to reach the final goal. Through constant practices of Yoga, one can overcome all difficulties and eradicate all weaknessess. Yoga is the gift of the ancient siddhars and its value is unique.

**VARMAM :**

Varmam is a science which deals with the nature and the disturbances of vital points which dwell in secret places of our physique. Any one wants to know that the furthur details of varmam can be had from the following manuscripts

1. வர்ம புலிப்பானி 2. வர்ம ஆணி நூல் 3 வர்ம கண்ணாடி 4 வர்ம கண்ணாடி வாதக் கண்வலி 5 வர்மத்திறவுகோல் 6 வர்ம நல்லுரை மாத்திரை 7 வர்ம சரநூல் 8 வர்ம பஞ்ச விதபதிவடங்கல் 9 வர்ம குடோரி நூல் 10 பஞ்ச சூத்திரம் 11 வர்ம பீரங்கி 12 வர்ம குருநாடி 13 வர்ம பொன்னூசித்திறவுகோல் 14 வர்ம குண்டூசித் திறவுகோல் 15 ஒடிவு முறிவு சாரி நீண்டகராதி 16 வர்ம வில்லும் விசையும் 17 வர்ம லாட சூத்திரம் 18 வர்ம சாரசூத்திரம் 19 வர்ம சாரி 20 வர்ம சீவஉற்பத்திக்காண்டம் 21 வர்ம ஊசிமுகம் — 1800.

**CONCLUSION :**

The principles of Siddha System have survived for the past many centuries, it cannot be rejected unlike the theories of of some other systems.

This system is based on spiritualism and it is not possible to bringout into closer contact with moden methods.

The scientific knowledge of siddhars is marvellous and their predictions are objects of great admiration at present.

## யதார்த்தம்

நான்
நானாக
நாணப்படுகிறேன்
ஊர்
ஊராக
உணரப்படுகிறேன்
சொல்
சொல்லாக
கொல்லப்படுகிறேன்
இரவு
இரவாக
இரக்கப்படுகிறேன்
கனவு
கனவாக
கலைக்கப்படுகிறேன்
நிஜம்
நிஜமாக
நினைக்கப்படுகிறேன்
ஏன்
'ஏனா'க
ஏங்கப்படுகிறேன்
மலர்
மலராக
மயக்கப்படுகிறேன்

— சுபா
மருந்தாளுனர் இறுதியாண்டு

# பட்டினியும், பத்தியமும்

**Dr. கந்த பலவேசம்** M.D., (துணை முதல்வர்)
**Dr G தியாகராஜன்** M D. III Year,

"உழைப்பதெல்லாம் உண்பதற்கே" என்று சில உணவு விடுதிகளில் எழுதியிருப்பதை நாம் கண்டிருக்கின்றோம். அப்படி நாம் உழைத்து சம்பாதிக்கும் பொருள் எல்லாம் உண்பதற்கு மட்டுமே என்றால் இந்த உடல் என்னவாகும் இப்படியே நாம் ஒரு நளைக்கு மூன்று வேளைக்குப் பதில் ஆறுவேளையாக உண்டு வந்தால் நம் உடம்பு கேடுஅடையாதா? இது பற்றி நவீன காலத்து மக்களாகிய நாம் மட்டும் அல்ல நமது பழம் பெரும் சித்தர்களும், மக்களும் உணர்ந்து அவர்களுடைய அரும் பெரும் படைப்புகள் வாயிலாக நமக்கு உணர்த்தி இருக்கின்றார்கள்.

நமதுஉடலின்சீரணஉறுப்புகள் எப்பொழுதும்வேலை செய்து கொண்டு இருந்தால் அவைகள் விரைவில் கேடு அடைந்து விடுகின்றன. நாம் இக்காலத்தில் சாதாரணமாக காலையில் சிற்றுண்டியும், நண்பகலில் பேருணவும், மாலையில் சிற்றுண்டியும், இரவில் உணவோ சிற்றுண்டியோ உட்கொள்கிறோம். இதனாலே யே நமதுசீரண உறுப்புகளுக்கு போதுமான ஓய்வை அளிப்பதில்லை என்று நம் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள்.

"ஒன்றோர் போதின் லுண்டவன் யோகியாம்,
நன்ற தாயிரண்டுண்டவன் போகியாம்,
துன்று மூன்று பொழுதுண்டான் ரோகியாம்,
அன்றி மேலுண்டோனாம் பல ரோகியே"
என்று கூறியுள்ளனர்

"உண்பதிரு பொழுதொழிய மூன்று பொழுதுண்ணோம்" என்றும், ஒரு பொழுது உண்பான் 'யோகி' என்றும், இரு பொழுது உண்பான் "போகி" என்றும் மூன்றாம் பொழுது உண்பான் "ரோகி" என்றும் அதற்கு மேலும் உண்பான் "பலரோகி" என்றும் நமது சித்தர்கள் தெற்றென தெளிவுபடுத்தியிருக்கிறார்கள்.

நாம் உண்ட உணவு சீரணமாக சுமார் ஐந்து மணி நேரம் ஆகிறது. இதற்கிடையில் ஏதாவது உண்டால் ஒரு வேலை முடியும் முன் மற்றொரு வேலையைத் திணிப்பது போலாம். எனவே அசீரணம் உண்டாகும். மேலும் சீரண உறுப்புகள் கெட்டுவிடுகின்றன. எனவேதான் ஒரு நாளைக்கு மூன்று வேளை உண்பதே சரி என்பது தெளிவாகின்றது.

சரி, இப்படி மூன்று வேளை மட்டும் உண்பதினால் நம் உடம்பின் சீரண உறுப்புகளுக்கு ஓய்வு கிடைக்கின்றதா என்ன? உண்ட உணவின் சாரத்தை பிரித்து ஏழுஉடற்கட்டுகளிலும் சேர்க்கப்படுகின்றன. இது முறையாக நடந்து கொண்டே இருக்கின்றது. இத்தொழிலுக்குச் சற்று ஓய்வு கொடுப்பதுதான் பட்டினி. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையோ அல்லது ஒரு திங்களுக்கு ஒரு முறையோ ஒரு நாள் முழுமையும் பட்டினி இருக்க வேண்டும். பட்டினி இருக்கும் அன்று நீரைத் தவிர வேறு எதையும் அருந்தக்கூடாது. இதனால் உடம்பின் பித்தம் அதிகரிக்கும். மறுநாள் பித்தத்தை சமனப்படுத்தும் பொருட்களை உணவோடு சேர்த்து உண்டால் பித்தம் தணிந்து தன்னிலை அடையும். அகத்தியிலை, நெல்லிக்கனி, பூசனிக்காய், போன்றவைகளைச் சேர்த்துக் கொள்ளலாம், இதனால் உடம்பு கெடுவதில்லை, சீரண உறுப்புகளுக்கும் ஓரளவு ஓய்வுகிடைக்கும். இதனைக் கருதித்தானோ என்னவோ, நம் முன்னோர்கள் பல வித விரதங்களைக் கடைப்பிடித்து வந்துள்ளார்கள்.

இந்துக்கள் வரலட்சுமி விரதம், ஏகாதசி விரதம், கார்த்திகை விரதம், மாதக்கடைசி வெள்ளிக்கிழமை, சஷ்டி விரதம், அமாவாசை, பௌர்ணமி விரதங்கள் போன்ற நோன்புகளைக் கடைபிடித்து வருகிறார்கள். இவ்வித விரதங்களால் சீரண உறுப்புகளின் பணிகளை ஒழுங்கு படுத்தி இருக்கின்றனர். விரதம் என்பது வெறும் சம்பிரதாயமாக அமையாமல் நமது பண்பாட்டின ஒரு அம்சமாகவே திகழ்கின்றது. மனதை பண்படுத்துகின்ற ஒரு ஆன்மீகப் பயிற்சியுமாகவும் அமைந்திருக்கிறது.

இந்துக்கள்மட்டுமல்ல மனத்தூய்மைக்காக முகமதியர்களும், கிருத்துவர்களும் கூட இத்தகைய நோன்பு அல்லது விரதத்தை மேற்கொள்கின்றனர். இரம்ஸான் மாதத்தில் முகமதிய பெருமக்கள் காலை $4\frac{1}{2}$ மணியிலிருந்து மாலை 6 மணிவரை உணவோ, நீர் பொருட்களோ உண்ணாது இருந்து இரவில் உணவு அருந்துகின்றார்கள். இரவில் எவ்வளவுதான் உணவு உண்டுவிட முடியும்? எனவே விரதம் உடற்பயிற்சியாகவும், மனப் பயிற்சியாகவும் அமைந்து விடுகிறது. கிருத்துவ பெருமக்கள் ஏசுபிரான் சிலுவையில் அறையப்பட்ட நாளில் இருந்து நோன்பு மேற்கொள்கின்றனர். ஆகவே வள்ளுவர் சொல்லுகின்ற படி

"ஆற்றலார் ஆற்றல் பசி ஆற்றல்"

என்கின்ற பேராற்றலின் மூலமாக உடலாற்றல், மனஆற்றல், ஆன்மீக ஆற்றலையும் அதிக படுத்த முடியும்.

## ஒருபொழுது இருத்தல் :-

"ஒரு பொழுதிருத்தல்" என்ற பழக்கம் இன்றும் நம்மிடையே வழக்கத்தில் இருந்து வருகின்றது. வாரத்தில் ஒருநாள் ஒருபொழுது (நண்பகல்) மட்டும் உணவு உண்பது இதனால் மந்தம் நீங்கி உடலிற்குப் புத்துணர்வும், தெம்பும் ஏற்படுகிறது.

உடல் நன்நிலையிலிருக்கும் பொழுது இத்தகைய நன்மைகளை மேற் கொள்ளாது நோய் வாய்பட்டபின் கட்டாயமாகப் பட்டினி கிடக்கவேண்டிய சூழ்நிலை வருகிறது. உடல் நலம் குன்றிய பின்னர் மருத்துவர் நோய் தீரும் வரை பேருணவு உண்ணக் கூடாது என்று கூறுகின்றனர். வாத சுரம் வந்த நோயினனுக்கு பேருணவு கொடாது, சிற்றுணவு கொடுக்க வேண்டும் என்றும், ஏழு நாட்கள் சென்ற பின் தான் பொருந்துகின்ற உணவுகளைக் கொடுக்க வேண்டும் என்று திருமூலர் கூறுகின்றார்

"உற்ற சுரத்திற்கும் உறுதியாம்
வாயுவுக்கும்
அற்றே வரும் மட்டும் அன்னத்தைக்
காட்டாதே"

என்பதினால் சுரம் நீங்குமட்டும் பேருணவு கொடாது, கஞ்சி போன்ற சிற்றுணவு கொடுக்கவேண்டும் என்பது புலனாகிறது அதனை "சிறு உணவு பெரு மருந்து" என்ற பழமொழி உறுதிப் படுத்துகிறது.

பட்டினி இருந்தால் அனைவருக்கும் பொருந்தி வருவதில்லை. சிலருக்கு விதிவிலக்கு முண்டு என்பதையும் உணர வேண்டும். பெருங் கழிச்சல் உடையோர்.கர்ப்ப முற்றிருக்கும் பெண்டிர், குழந்தைகள், உடல் இளைத்தவர்கள், ரத்தசோகையுடையோர் ஆகியோர் பட்டினியை மேற்க் கொள்ளக் கூடாது.

## பத்தியம் :-

பட்டினிக்கும், பத்தியத்திற்கும் சிறிது வேறுபாடு உண்டு. பட்டினி என்றால் முற்றிலும் பேருணவை நிறுத்தி சிற்றுண்டிகளையும், நீர்த்துவ உணவுகளையும் மேற்கொள்வது என்பதாகும். ஆனால் பத்தியத்தில் நோயினன் அருந்திவரும் மருந்தின் குணங்களையும், செயல்களையும் பொருத்து குறிப்பிட்ட சில வகை உணவுகளை நிறுத்திக் கொள்வது, சிலவகை ருசியுடைய காய், கறிகளை உண்ணாதிருத்தல், சில பழக்க வழக்கங்களை மாற்றிக் கொள்வது என்பதாம்.

நாம் மருந்துண்ணும் காலத்தில் மருத்துவர் கூறும் அறிவுரையின்படியும் கண்டிப்பின் படியும் பத்தியத்தை மேற்கொள்ளாவிட்டால் மருந்தின் செயல்பாடு தன்மை கெட்டு விடுவதோடல்லாமல் உடல் வன்மையையும் கெடுத்து விடவும் கூடும். எனவே எந்த அளவுக்கு பத்தியத்தை மேற் கொண்டு மருந்தை பயன் படுத்துகிறோமோ அந்த அளவுக்கு அம் மருந்தின் பலனை நாம் அடையலாம்.

மது மேக நோயில் இனிப்பு ருசியுடைய பொருட்கள் மற்றும் மாவுப் பொருட்களை நீக்க வேண்டும், ரத்தசோகை, மஞ்சள் காமாலை நோயுடையோர் உப்பையும், புளியையும் நீக்குவது நலம், வாத நோயால் வருந்தும் நோயினர் கிழங்கு வகைகள், எண்ணெய் உணவுகள், பருப்பு வகைகள் ஆகியனவற்றை உணவில் சேர்க்கக் கூடாது. தோல் வியாதியினர் கத்தரிக்காய், மொச்சை,

தக்காளி, மீன், கருவாடு போன்ற உணவுப் பொருட்களை அறவே நீக்க வேண்டும்.

பொதுவாக மருந்துண்ணும் காலத்தே அகத்திக்கீரையை உணவோடு சேர்த்துக் கொண்டால் அம் மருந்தின் செய்கையை முறித்து விடும். கழிச்சல் நோயால் வருந்து பவர்கள் காரமான உணவினை நீக்கி மலக் கட்டினை உண்டுப்பண்ணக் கூடிய உணவுப் பொருட்களை உண்ணுதல் நலம், உணவோடு தயிர், துவர்ப்பு செய்கையுடைய உணவுப் பொருட்களை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

பத்திய வகையில் இச்சாப் பத்தியம் என்பதும் ஒன்றாகும். குறிப்பிட்ட சிலநோய் களுக்கு இச்சாப்பத்தியத்தை மேற்கொள்ள வேண்டும் இதனைசிற்றின்ப நுகர்ச்சியில் இச்சையை செலுத்தக் கூடாது என்பார்கள். ஆசையைக் கட்டுப்படுத்த வேண்டிய ஒழுக்க நெறிக்கு இச்சாபத்தியம் என்றனர் மேலும் கடுகு, நல்லெண்ணெய், கடலை, புளி, மாங் காய், பலா, கள், சாராயம், புகையிலை, வெள்ளுள்ளி, அகத்தி, கொள்ளு, போன்றவை களை உபயோகத்தில் இருந்து நீக்குவதையும் இச்சாபத்தியம் என்பர்.

எனவே பத்தியம் என்பது பயப்படக் கூடியதோ கடுமையான உணவு கட்டுப் பாடு விதி முறைகளோ அல்ல என்பது புலனா கின்றது.

உணவு உண்ணும் விதிமுறைகளைக் கூறும் இடத்து முதலில் கொஞ்சம் நீர் அருந்தி இரைப்பையை நனைத்தபிறகு சிறிது இனிப்புப் பொருட்களையும், மத்தியில் புளிப்பு, உப்பு, கார பண்டங்களையும் பின் இலைக்கறிகளை யும், முடிவில் தயிர், துவர்ப்பு சம்மந்தமான புளிப்பு, ஊறுகாய் முதலியவைகளையும் உண்ணவேண்டும் என்று சித்தர்கள் அறுசுவை உண்டி விதிகளை மிகவும் அருமையாக கூறி இருக்கின்றார்கள்.

கடினமான தொழில், குளித்தல், விளை யாடல், நீந்துதல், அதிகமாக பேசுதல் ஆகிய காரியங்களை உணவு உண்ட ஒருமணி நேரத் திற்குள் செய்யலாகாது. ஆனால் இரவு உணவுக்குப் பிறகு சிறிது தூரம் நடப்பது நன்று.

**உணவின் அளவும் கால மாறுபாடும்:-**

இது குறை உணவு, மிகு உணவு, அகால உணவு என மூவகைப்படும்.

**குறையுணவு:-**

“இழிவறிந்துண்பான் கண் இன்பம் போல் நிற்கும்
கழி பேரிறையான் கண் நோய்”

என்ற வள்ளுவன் வாக்கின் படி உணவை குறைந்த அளவில் உபயோகிப்பது உடற்கு நன்மை பயக்கும் எனினும் அதிக குறைவாக கொள்ளின் வன்மை உண்டாவதற்கும், உடல் செழிப்பதற்கும் அது போதுமானதாய் இல்லா மையால் தேகம் குன்றும்.

**மிகு உணவு :-**

“மீதூண் விரும் பேல்”
“அளவுக்கு மிஞ்சினால் அமிழ்தும் நஞ்சாம்”

என்பதற்கு இணங்க அதிக அளவாக உண்ணும் உணவால், மந்தம் ஏற்பட்டு அசீரணம் உண்டாகும் இதனைத் தான் வள்ளுவர்

“தீயளவின்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயளவின்றிப் படும்”

என்றார்

**அகால உணவு:-**

காலம் தவறி பசி இல்லாத பொழுது உண்பதால் பல கெடுதல்கள் உண்டாகும்.

எனவே “நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்” என்பதற்கு இணங்க நம் சித்தர்கள் வழிகாட்டிய இக் கொள்கைகளை கடை பிடித்து முறைப்படி, பட்டினியையும், பத்தியத் தையும் மேற்கொண்டால் நோயின்றி வாழலாம். இல்லையேல் கட்டாயமாக நோய் வந்துற்ற காலத்து பட்டினி கிடக்க நேரும் நோய் வந்தபின்னர் முறைப்படி பத்தியத்தை மேற்கொண்டோமானால் நோயின் தீவிரத் தில் இருந்து தப்பிக் கொள்ளலாம். பல்லாண்டு காலம் சித்த மருத்துவம் போல் சீர் மிகு வாழ் வை அடையலாம்.

---



# சிசு ரோகமும் சித்தாமிர்தமும்

**Dr. N. Chidambaranathan. M. D., (Siddha)**
Reader - Maruthuvam - Dept

பிறந்த குழந்தையை சிசு என்பர். சிசுக்களுக்கு ஏற்படும் உபாதைகளை அவர்களால் சொல்ல முடியாத நிலையிலிருப்பதால் அவர்களின் உபாதை குறிகோணங்களைக் கொண்டும் பெற்றோர்களின் கூற்றினைக் கொண்டும். மருத்துவர் அறிவுத் திறனால் வியாதியை நிர்ணயிக்கும் நிலை தான் குழந்தை வைத்தியத்திற்குரிய சிறப்பு.

"வழிசிசு நோய் மருந்து வகைவகை உரைப்போ மென்றே" — என தன்வந்திரி 'குழந்தை வாகடம்' கூறுவதைக் கொண்டு சித்த மருத்துவத்தில் குழந்தை மருத்துவத்தின் பழமையையும், பெருமையையும் உணரலாம்.

பிறந்ததிலிருந்து 12 வயது வரையிலான காலத்தை குழந்தைப் பருவமென பாவித்து குழந்தை மருத்துவம் சித்த மருத்துவத்தில் மேற்கொள்ளப்படுகிறது. ஆங்கிலத்தில் Age limit classified Disease — என்று கூறுவதை, நமது முன்னோர்கள் பருவங்களாகப் பிரித்து, ஒவ்வொரு பருவத்திற்கும் மாத, வருட, காலங்களை நிர்ணயித்துள்ளனர். இப்பருவத்தில் ஏற்படக்கூடிய பல நோய்களுக்கு சிறப்பான முறையிலே சித்த மருத்துவம் செய்யப்படுகிறது. மருத்துவ மனையில் மட்டுமில்லாது வீட்டிலேயே தாய்மார்கள், மருந்து சரக்குகளை, அடிக்கடி குழந்தைகளுக்கு ஏற்படக் கூடிய நோய்களைக் குணப்படுத்துவதற்காக சேர்த்து வந்திருக்கிறார்கள்.

இம் மருந்துகள், நோயின் துன்பங்களை நீக்குவதோடு நோய் வராமல் தடுக்கவும் பயன்படுகின்றன. இவ்வகையில் குழந்தை பருவத்தில் குழந்தைகளுக்கு அடிக்கடி பொதுவாக ஏற்படக் கூடிய முக்கிய நோய்களையும் அவற்றிற்கான சித்த முறைகளைப் பற்றியும் காண்போம்.

குழந்தை பிறந்த மூன்று மாதங்களுக்குள் ஏற்படக் கூடிய சிலவகை நோய்கள் குழந்தைகளின் பெற்றோர்களின் உடல்நிலை காரணமாகவும், உடலின் உள்ளே தோன்றக் கூடிய மாறுபாடுகளாலும், உடலுக்கு வெளியே வாழக் கூடிய இடத்தில் தோன்றும் தட்ப, வெப்ப மாறுபாடுகளினாலும், ஏற்படுகின்றன.

"உரைபெறத் தந்தை தாயின் ஊழ்வினை
தொடர்ந்த கூறும்
மறப்பற தாயின் ரோகம் மைந்தனைச்
சார்ந்த கூறும்
கறைபொத்தித் தீனியாலும் மகள்
தந்தோர்க் கருமத்தாலும்
பரம் பெறும் தோஷத்தாலும் பட்சியும்
கிரகக் கூறே"
— தன்வந்திரி வாகடம்.

குழந்தை பிறந்ததிலிருந்து 3 மாதங்கள் வரை ஒரு நாள் விட்டு ஒரு நாள் 'உரை மாத்திரை' என்ற மருந்தை கொடுத்து வந்தால், பல வகை நோய்கள் ஏற்படாதவாறு தடுக்கின்றது. இம் மருந்தில் பெருங்காயம், மாசிக்காய், வசம்பு, சுக்கு பூண்டு, அதிமதுரம், அக்ரகாரம், ஜாதிக்காய், முதலியவைகள் சேர்கின்றன.

குழந்தை பிறந்த உடன் சீறிச் சீறி அழுதால் இதற்கு சிறுதேக்கு, சிறுதிப்பிலி இவ்விரண்டையும் சரிஎடை எடுத்து, வெயிலில் உலர்த்தி இடித்து, பொடித்து அதை துணியில் வடிகட்டி, அப்பொடியை பசுநெய் கூட்டி, தாயின் மார்பில் தடவி, குழந்தையைப்

பாலுண்ணும் படி செய்தால் சீறி அழுகையும், விக்கலும் வயிறு பொருமலும் தீரும்.

பிள்ளைக்கு வயிறு வீங்கினால், அதிமதுரப் பொடியை புளித்த தயிரில் அரைத்து வயிற்றில் பூச வேண்டும். பால் எதிரெடுத்தாலோ அல்லது அதிக கொட்டாவி விட்டாலோ, தோல் நீக்கிய 5 பூண்டுத் திரியை, சட்டியி லிட்டு இளவறுப்பாக வறுத்து அதனுடன் சிறிது ஓமத்தைச் சட்டியிலிட்டு அது வெடிக் கும் போது 80 மிலி தண்ணீர் விட்டு பாதியாக காய்ச்சி ஓர் தேக்கரண்டி கொடுக்கவும். பால் உண்ணாவிடில் அதிமதுரப் பொடியை பால் விட்டரைத்து, தாயின் மார்பில் பூசி குழந் தையை பால் குடிக்கச் செய்ய வேண்டும். மலக் கட்டுக்கு, அதி மதுரம், வேப்பந்துளிர், நாட்டுச் சர்க்கரை சம அளவு எடுத்து நெய் விட்டு அரைத்து 100 மிலி கிராம் கொடுக்க தீரும். சிறு நீர் செல்லாது கட்டி விட்டால், எலிப் புழுக்கையையும், வெள்ளரிப் பழவிதையையும் சம அளவு எடுத்துத் தண்ணீர் விட்டு அரைத்து குழந்தையின் அடிவயிற்றில் பற்றிட்டால், சிறு நீர் நன்றாக இறங்குவதோடு பாலையும் நன் றாக குடிக்கும்.

குழந்தைகளுக்கு 3 மாதம் முதல் 1 வருடம் வரை தோடம் என்ற நோய் ஏற்படுகிறது. தோடம் என்றால் தொடுதல் என்பது பொருள் இது கையால் தொடுதல், கண்ணால் தொடு தல், உடலால் தொடுதல் என 3 வகைப்படும்.

நவீன மருத்துவத்தில் கூட தொட்டால் தோடம், அல்லது நோய் ஏற்படுகின்றது என்ற கருத்தை ஒப்புக் கொள்வர். ஆனால், சித்த மருத்துவத்திலோ, அகமும், புறமும் தூய்மை யற்றவர்கள்பார்த்தாலே தோடம் உண்டாகும் எனசொல்லப் படுகிறது. எனவே தான்,

"கல்லடி பட்டாலும் படலாம்;
கண்ணடி படக் கூடாது" என்ற பழமொழி கூறப்பட்டுள்ளது.

இதை போலவே, நோய் கொண்ட பறவை களின் காற்று குழந்தைகளின் மேல் அதிகாலை யிலோ, முன் மாலையிலோ படுமேயானால் அதுவும் தோடம் செய்யும் எனக் கூறப்படுகி றது. இதற்கு மெய் ஞானம் என்பது விஞ்ஞா னத்திற்கு அப்பாற் பட்டது என்பதே விளக்க மாக அமையும். தோடமானது பறவைகளா லும், எச்சிலாலும், பெண்ணாலும், ஆணாலும் தேரை முதலியவற்றாலும் ஏற்படுகிறது. தோடத்தில் பொதுவாக உடல் வலி, செரியா வாந்தி, அடிக்கடி பதறி திடுக்கிடல், வயிறு கடுப்பு, பேதி ஏற்படல், சுரம், சீறிச் சீறி அழல் ஆகிய குறிகுணங்கள் காணப்படும். குழந் தைக்கு முத்தம் கொடுப்பதனால், முத்தம் கொடுப்பவர்க்கு ஏதேனும் நோயிருப்பின் அந் நோயானது எச்சில் மூலமாகவும், சுவாசம் மூல மாகவும் பரவுகிறது. பெண்கள் மாத விடாய் கண்டபோதும், கருச்சிதைவு ஏற்பட்ட போதும், மணமான ஆண், பெண் காலையில் எழுந்த உடன் தூய்மையில்லாத நிலையிலும், குழந்தைகளைத் தொடுவதால் தோடம் ஏற்ப டுகிறது.

எல்லா வித தோடத்திற்கும் சித்த மருத்து வத்தில் உள்ளுக்கு மருந்து கொடுத்தும், வெளியே வேர் கட்டியும் பரிகாரம் செய்யப் படுகிறது. உள்ளுக்கு "அதிமதுர மாத்திரை" கொடுக்கலாம். இதில் வசம்பு, அதிவிடயம் கோரைக் கிழங்கு, தேவதாரம், கடுக்காய் தோல், அதிமதுரம், மரமஞ்சள் சேர்கின்றன. சீமா நெல்லி வேரை விதிமுறைப்படி குளிசம் செய்து குழந்தைக்கும், தாய்க்கும் கட்டினால் எல்லாவித தோடங்களும் நீங்கும்.

குழந்தைகளுக்கு ஏற்படக் கூடிய நோய்க ளில் மாந்தமும் ஒன்று. இது உடலில் மட்டு மன்றி, உள்ளத்தாலும் ஏற்படக் கூடிய மந்த நிலையினைக் குறிக்கின்றது. குழந்தை உண் ணும் தாய்ப்பால் தாய் உண்ணும் உணவுப் பொருள்களைப் பொறுத்து அதன் இயல்பு அமையும். எனவே, தாயும் மந்தம் உண்டு பண் ணும் உணவுப் பொருட்களை நீக்க வேண்டும்.

குழந்தைப் பருவத்தில் உண்டாகக் கூடிய பொதுவான தோல் நோய் கரப்பபான் ஆகும். இது ஓர் Seasonal disease – ஆகும். உடலில் திமிர், தினவு, சொரி, புண், தடிப்பு, வெடிப்பு, நீர் கசிதல், சீழ் கோர்த்தல் ஆகிய குறிகுணங் களை உண்டாக்கி தோலின் இயற்கை நிறத்தை வேறுபடுத்தும். இந்நோய் 18 வகைப் படும். இது உராய்வதாலும், சோளம், கம்பு, கேழ் வரகு, வாழைக்காய், பாகற்காய், கத்தரிக்காய்,

மீன் முதலிய கரப்பான் பொருட்களை தாயோ அல்லது குழந்தைகளோ உண்பதாலும் ஏற்படும்.

இந்நோய்க்கு, மேலுக்கு திரிபலைக் குடிநீரால் கழுவி, பின் கரப்பான் தைலம் பூச வேண்டும். பரங்கிக் பட்டை சூரணம் உள்ளுக்கு கொடுக்கலாம்.

அக்கரம் (அல்லது) அச்சரம் என்ற நோயானது உணவின் மாறுபாட்டால் குழந்தையின் வயிற்றில் சூடு ஏற்பட்டு, அச் சூடானது நாவிற்குப்பரவி, வாயில் மாவைப் போல் நீரு பூத்து குழந்தைகளுக்கு பல துன்பங்களை உண்டாக்கி பாலை உண்ண முடியாத படி துன்பங்களை விளைவிக்கும் இந்நோயில் நாவேக்காடு, சொள்ளு நீர் வடிதல், நாவெளுத்துக் காணல், தலைவலி, வாயில் காரம்பட முடியாமை ஆகிய குறிகுணங்களை உண்டாக்கும். அதிமதுரம், மணிபுங்கம்பழம், தாய்ப் ப்பால், பசு நெய் இவை சேர்ந்த அதிமதுர நெய்யினை உள்ளுக்கு வழங்கலாம். திரிபலைக் குடிநீரைக் கொண்டு வாய் கொப்பளிக்கவும், வெங்கார மதுவை நாவில் தடவவும் செய்யலாம்.

தேங்காய் துருவல் பூவை, வாயில் மென்று அப் பாலினை சிறிது நேரம் வாயிலடக்கி பின் துப்பிவிட வேணடும்.

குழந்தைக்கு சுரம் ஏற்பட்டால், அதன் மூலகாரணத்தை அறிந்து மருத்துவம் மேற்கொள்ள வேண்டும்.

குழந்தைகளுக்கு வலிப்பு நோயானது. மாந்தம், கணம், சுரம் ஆகிய வற்றைத் தொடர்ந்து ஏற்படலாம். இதற்கு ஓணான் சுடர் தைலம் அல்லது வேப்பெண்ணையை உள்ளுக்குக் கொடுக்கலாம்.

குழந்தைகளுக்கு அடிக்கடி ஏற்படும் நோய் கழிச்சல் (பேதி) ஆகும். இது செரியாமையாலும், நோய் கிருமிகளாலும், ஒவ்வா உணவுப் பொருட்களாலும் சாதாரணமாக ஏற்படுகிறது. இதற்கு தயிர்ச்சுண்டி சூரணம், ஆமை ஓடு பற்பம், ஓமத்திநீர் ஆகியவை கொடுக்கலாம் குழந்தைகள் மண், சாம்பல் முதலிய அசுத்தப் பொருட்களைச் சாப்பிடுவதாலும், கிருமிகளாலும், ரத்தக் குறைவு ஏற்பட்டு சோபை, காமாலை முதலிய நோய்கள் ஏற்படலாம். இதற்கு ரத்த விருத்திச் செய்யக் கூடிய இரும்புச் சத்துள்ள மருந்துகள் கொடுக்க வேண்டும்.

தொற்று நோயான "கக்குவான்" நோயானது குழந்தைகளுக்கு சாதாரணமாக ஏற்படுகிறது. மூச்சுவிட முடியாத அளவு இருமல் இருக்கும்; கோழை வெளிப்படும். இதற்கு கக்குவான் மருந்து (ஊமத்தை + உப்பு) கொடுக்கலாம். நோய் வராமல் தடுக்கும் மருந்துகளை, குழந்தைகளுக்கு சரியாகக் கொடுக்காததால், கக்குவான் (Whooping Cough), தொண்டை அடைப்பான் (Diptheria), வில்வாத ஜன்னி (Tetanus), இளம்பிள்ளை வாதம் என்ற பால வாதம் முதவியன ஏற்படுகின்றன. இளம்பிள்ளை வாதத்திற்கு சித்த மருத்துவத்தில் பல வகையான சிறப்பு மருத்துவ முறைகள் உள்ளன.

தாயைப் போல பிள்ளை, நூலைப் போல சேலை என்பதற்கிணங்க தாயின் வளர்ப்பு முறைக்குத் தக்க குழந்தையின் நலமும், குணமும் அமைகின்றது.

## STUDENTS' ASSOCIATION



Chairman
**G. Arumugam**



Vice-Chair man
**I. Cell Madurai**



Secretary
**D. Chakravarthy**



Assis al Secretary
**S. She ayagam** B.Sc.



Treasurer
**P. Thirumuruga Venkatesan**



Lady Representative
**S. Aruna**

## FINE ARTS ASSOCIATION



**D**



**vid Solomon**
**Secretary.**



**Sasikala**
Lady Representative

# College Day & Sports Day Celebrations



Staff in the Victory Stand



Student Chairman Addressing



House Winner



Prizes with




Dance — Dance



# சித்த மருத்துவத்தில் தமிழ் மொழி சிறப்பு

**Dr. க. ஜெயக்குமார் M. D (s)**
உதவி விரிவுரையாளர்

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த மொழியாகிய தமிழ் தவழ்ந்து விளையாடிய குமரிக் கண்டத்திலே சித்தத்தை அடக்கி பேரின்பத்தை அடைந்த சித்தர்கள் உலகோர் உய்யும் பொருட்டு செந்தமிழ் கவிதைகளிலே உரைத்த தொன்மை வாய்ந்த மருத்துவம்.

**சிறப்புகள்:**

உணவையே மருந்தாக்கி, மருந்தையே உணவாக்கும் கலை வல்லது சித்த மருத்துவம். உலோக உபரச, பாடாண வகைகளாலும் நோய் தீர்க்க வல்லது. காலங்கள் பல கடப்பினும் சாகாக்கலை இது. சாகாவரம்தரும் அரிய கலையும் இதிலடக்கம்.

அகத்திய மாமுனிவர் பொதிகை மலையிலிருந்து தீந்தமிழை வளர்த்ததோடு அச்செந் தமிழிலே மருத்துவ நூல்களையும் எழுதினார். அதனால்சித்த மருத்துவத்தைக் கற்க வேண்டுமெனில் ஆழ்ந்த தமிழ் புலமை வேண்டும்.

பண்டைய இதிகாசங்களோடு சித்த மருத்துவத்தை ஒப்புமைப்படுத்தி விளக்கினர் சித்தர்கள்.

தேரையரால் இயற்றப்பட்ட மருத்துவ பாரதம். பாரதத்தை நன்கறிந்தவர்தான் மருத்துவ பாரதத்தை தெளிவாக உணர முடியும். ஆக, மருத்துவம் கற்க மொழிப்புலமை அவசியம் என்பதை மறைமுகமாய் உணர்த்தியுள்ளார்.

மருத்துவ பாரதத்திலே கௌரவர் நூற்றுவரும் அவரைச் சார்ந்தவரும் நோய்ப் பகுதியினராயும் பாண்டவர் ஐவரும் அவரைச் சார்ந்தவரும் அவிழ்தப் பகுதியினராயும் திருமாலின் கூறாயமைந்த கண்ணபிரான் மருத்துவனாயும் உருவகிக்கப்பட்டுள்ளார்கள்.

இவர்கட்குப் பெயர்கள் அவ்வவர் இயற்கை குணத்திற்குப் பொருந்தும் வகையாகவும் மருத்துவ முறைமைக்கும் வரலாற்றிற்கும் பொருத்தமாகவும் கூறியுள்ளார். இவ் வரலாறு நிகழுமிடங்களாகிய அத்தினாபுரமும் காசியம்பதியும் நோய்களின் தோற்றத்திற்கும் அவிழ்தங்களின் பிரயோகத்திற்கும் ஏற்றனவாகிய தூயசரீரம், சூக்கும சரீரம் எனும் மக்களுடம்பாகவும் கொண்டு சந்தனு மகாராஜனிலிருந்து பின் வந்த மரபினரை மருத்துவ முறைக்கு ஏற்ப பொருந்தி, சந்தனுவை முதுகெலும்பென்றும் அவன் மணந்த கங்கை மாயை என்றும், அவள் மைந்தன் வீடுமனை விரதமென்றும் துணிவென்றும், சத்தியவதி பாற் சந்தனுவிற்குப் பிறந்த மக்களிருவரை இரு வினையென்றும் திருதராட்டிரனை தாமத குணமென்றும் விதுரனை சத்துவ குணமென்றும் பெயரிட்டமைத்துக் கொண்டு மேல்வரு மரபினரையே வாகட மருத்துவ நெறிக்குக் கொண்டுள்ளார்.

நோய் வர்க்கத்திலே துரியோதனனை வாத சேட்பமாகவும், துச்சாதனனை வாத சன்னியாகவும், அவன் தம்பிமார்களை வாத சயித்தியரோக வர்க்கங்களாகவும் கொண்டார் அவிழ்ந்த வர்க்கப் பெயர்களை பலவகையாய் பிரித்து உலோகங்கள், இரத்தினங்கள், பாடாணங்கள், மூலிகைகள், கடைச்சரக்குகள் எனவகைப்படுத்தி பெயரமைத்து உள்ளார்.

பாண்டவர்கள் வனவாச காலத்தை நோய்களின் வளர்ச்சிக்கும் அவிழ்தங்களின் பக்குவ முதிர்ச்சிக்கும் உவமை கூறுகிறார்.

தூது செல்லும் உலூகனும் கண்ணனும் அவிழ்தப் பகுதியாகி சஞ்சயன் நோய்ப் பகுதியாகி அமைந்ததற்கு பொருந்துமாறு வாதமும் சேட்பமும் உடல் வளத்தை மேன்மையாக்குவதற்கும் பித்தம் உடல் நலத்தைச் சிதைப்பதற்கும் உவமை கூறினார்.

வீமசேனன் சூத பற்பமாயும், பாஞ்சாலி கெந்தகமாயும் சுதக்கணையின் தம்பியருள் கீசகன் மேக கிரந்திப் புண்ணாகவும், எஞ்சிய 103 பேரும் மேக கிரந்த வர்க்கமாயும் அமைந்த நுண்ணியமுறைக்கேற்ப பாஞ்சாலியும் வீமனும் கீசகனும் அவன் தம்பியரும் அழிந்துபடக் காரணமாகின்றனர்.

தாம்பிரத்தை அர்ச்சுனனாகவும் பொன்னைஅபிமன்யுவாகவும் கொண்டு பகை முடிக்கும்அவ்வீரர்கள் போல இம்மருந்துகள் பிணிய கற்றும் தன்மை உடையவை என்பதை விளக்குகிறார்.

முடிவுரை:

தமிழ் மொழியின் இயல்பகுதி இலக்கணமாயமைந்து மொழி வரம்பு சிதையாமற் காத்து வரும் தொல்காப்பியம் கூறியபடி உவமைகளின் மூலம் இதிகாச பாத்திரங்களின் தன்மை பிறழாமல் மருத்துவ முறையைக் கூறி மொழிவளம் பெருக்கினர் சித்தர்கள்.

சித்த மருத்துவம் கற்க வேண்டுமெனில் மருத்துவவறிவோடிலங்கிய நுணுக்கமும் தமிழில் புலமையும் உடையவராயிருத்தல் அவசியம். அதனால் மருத்துவத்தோடு மொழி வளர்த்த பெருமைக்குரியது சித்த மருத்துவம்.

இன்று சித்த மருத்துவம் ஒளி குன்றி காணப்படுவதற்கு காரணம் தமிழர்க்கே சித்தர்கள் எழுதியவற்றை படித்து பொருள் புரிந்து கொள்ள முடியாத நிலையிலிருப்பதால் தமிழ் மொழியும் பெருமை குன்றி போய்க் கொண்டிருக்கிறது. சித்தர்கள் மருத்துவத்தைப் பற்றி மட்டுமல்லாமல் மக்கள் வாழ்விற்கான வழிமுறைகளையும் கூறியுள்ளனர். திருவள்ளுவரின் பொய்யா மொழி இன்று உலகம் முழுவதும் போற்றப்படும் தமிழ் நூல். இதே போல சித்தர்கள் எழுதிய ஒவ்வொரு நூலையும் ஆராய்ந்து பொருளறியும் வல்லமையை நாம் என்று பெற முடியுமோ அன்றே தமிழ் மொழி முழுமை பெறும். மருத்துவம் மட்டுமின்றி வாழ்க்கைச் சிறப்புகளைக் கூறும் சித்த மருத்துவத்தை வளர்த்தாலே போதுமானது. தமிழ் தானே வளரும். ஏனெனில் தமிழ்வேறு சித்த மருத்துவம் வேறு என்று பிரிக்க முடியாத படி இரண்டும் பின்னிக் கிடக்கின்றன. எனவே, சித்த மருத்துவம் வளரும் வகை செய்வோம். தமிழ் மொழி வளர்ப்போம்.

# A Good Paryer

**M. Sasikala, Final year.**

Lord, Make me an instrument of your peace.
Where there is hatred, let me sow love
Where there is injury, pardon
Where there is discord, unity
Where there is doubt, faith
Where there is error, truth
Where there is despair, hope,
Where there is sadness, joy,
Where there is darkness, light
O Divine Master, grant that I may not so much seek
To be consoled, as to console,
To be understood, as to understand,
To be loved as to love for
It is in giving that we receive
It is in pardoning that we are pardoned
It is in dying that we are born to eternal life.

— St. Francis Assisi.



| | | |
|---|---|---|
| கீரை | ,, | 25 |
| காலிபிளவர் | ,, | 30 |
| வெங்காயம் | ,, | 60 |

**பழவகைகள் :-**

| | | |
|---|---|---|
| வெள்ளரி | 1 கப் | 12 |
| தக்காளி | 1½ ,, | 30 |
| ஆப்பிள் | 1½ ,, | 100 |
| வாழை | ¾ ,, | 200 |
| திராட்சை | 1¼ ,, | 100 |
| கொய்யா | 1½ ,, | 100 |
| மாம்பழம் | 1 ,, | 100 |
| பப்பாளி | 3 ,, | 100 |

| உணவுப்பொருள் | அளவு | கலோரிகள் |
|---|---|---|
| அன்னாசி | 2 கப் | 100 |
| கிரணிபழம் | 3 கப் | 100 |

**இனிப்பு பொருள்கள்:-**

| | | |
|---|---|---|
| பாதாம்பர்பி | 30 gm | 200 |
| சாக்லேட் | 1 gm | 85 |
| குலாப்ஜாமுன் | 40 gm | 200 |
| குல்ஃபி | ½ கப் | 500 |
| ஐஸ்க்ரிம் | 1 கப் | 195 |
| லட்டு | 40 gm | 250 |
| ரசமலாய் | 40 gm | 250 |
| ரசகுல்லா | 40 gm | 150 |

**எண்ணெய்யில் சமைக்கப்பட்ட பொருட்கள் :-**

இந்த உணவு வகைகளுக்கு ஒவ்வொரு ஸ்பூன் எண்ணெயுடன் 140 கலோரி சேர்த்து கொள்ளவேண்டும்.

| | | |
|---|---|---|
| பொரித்தமுட்டை | 1 | 100 |
| ஆம்லெட் | 1 | 110 |
| ப்ரெட் | 1 ஸ்லைஸ் | 60 |
| பொரித்தஅப்பளம் | 1 கப் | 30 |
| பக்கோடா | 1 கப் | 250 |
| மசால்தோசை | 1 | 250 |
| சென்னா | 30 gms | 150 |
| படூரா | 40 gms | 150 |
| தந்தூரிசிக்கன் | 2 துண்டு | 450 |
| மீன் | 1 கப் | 110 |
| மட்டன் | 1 கப் | 250 |
| சிக்கன் | ,, | 220 |
| மட்டன்சாப் | ,, | 100 |
| வேகவைத்தமுட்டை | 1 | 80 |

மேற்கண்ட பொருட்கள் அனைத்துமே நம் அன்றாட உணவில் கட்டாயம் சேர்த்து கொள்ள வேண்டிய சத்துப் பொருட்களின் அட்டவணையேயாகும். அதை, அளவுடன், முறையுடன் சேர்த்து உடல் வன்மையும், நோயற்ற வாழ்வும் பெறுவதே நம் திறமை.

---

**JOKE**

*Listener* : Will the orchestra play anything I requst ?

*Music conductor* : Certainly Sir.

*Listener* : Well, ask them to play chess.

*P. Sujatha.*

# ALCOHOLISM AND DRUG ADDICTION

Thomas M. Walter, G. Sivaraman, II B.S M.S.,

## Introduction

The use and abuse of alcohol and other drugs is in no way a new phenomenon in the Indian history. our ancient 'puranas' and 'Vedas' refer to the use of these substances. There are several substances like alcohol and different varieties of other drugs, which when consumed in certain quantities, influence people's thoughts, emotions, sleep, appetite, sexual functioning, social interaction and various other aspects of behaviour.

## THE DRUGS OF ADDICTION:

a) Opiate type — derivatives of Opium or synthetic opiates e.g) morphine, heroin, codein, methadone, pethedine etc.

b) Sedative drugs: (e.g) Alcohol, sleeping pills like barbiturates, mandrax, tranquilizers like calmpose valium.

c) stimulant drugs — Amphetamines (dexedrin) and cocaine.

d) Cannabis — (e.g) Ganga, bhang, Charas, hashish.

e) Hallucinogenic agents — L.S.D, Mescalio, P.C.P (phencylidine)

f) Volatile solvents/ inhalants — petroleum products.

g) Other drugs — Tobacco, betel, coffee/tea.

The various methods of consuming the drugs:—

Eating, drinking, chewing, smoking, inhalation, sniffing, nasal insufflation and various routes of injection like intra-muscular, intra-venous etc.

The alcohol content in some alcoholic beverages is as follows:

| Whisky, Brandy, Arrack, Rum | Wines | Beer, Toddy |
|---|---|---|
| 40–55% by vol. | 10—20% by vol. | 6–8% by vol |
| 30 ml (1 drink) | 60 ml (1 drink) | 285 ml (1 drink) |
| (1 oz) | (2 oz) | (10 oz) |
| 10 gm alcohol | 10gm alcohol | 10gm alcohol |

(Data Courtesy: T.T.K. Hospital, Madras—20.)

## REASONS FOR ADDICTION:

People start drinking alcohol for reasons such as pleasure (creates a sense of well-being) to be sociable (creates a sense of lowered inhibitions) to feel relaxed (after a day's hard work) to forget worries (relieves tension).

The psycho-social correlates of entering into drugs are:

1) psychological distress.
2) Low self-esteem.
3) Low religiosity.
4) Low achievement and motivation.

Psycho sociological backgrounds are:

1) A jaundiced view of society.
2) concern with personal autonomy.
3) stronger peer influence than parental influence.
4) more friends who model problem behaviour.

## MEDICAL COMPLICATION OF ALCOHOLICS:

a) Heart—Unstable blood pressure, irregular pulse, enlarged heart.
b) Pancreas Painful inflammation.
c) Muscles—Weakness, loss of muscle tissue.
d) Intestines:—Lining becomes inflammed, Ulcers.
e) Brain—Cell damage resulting in loss of memory, confusion.
f) Lungs—Greater chance of infections including T.B.
g) Genitals—Temporary impotence.
h) Skin—Flushing, sweating, bruising.
i) Blood—Changes in R.B.C.
j) Gastro intestinal tract—Diarrhoea, Pancreatitis. Peptic ulcer, gastritis.
k) Liver—Fatty degeneration, alcoholic hepatitis, cirrhosis, decreased absorption of folate, calcium.
l) Metabolic changes - Metabolic acidosis, Hypo calcaemia, decreased absorption of calcium, keto acidosis.
m) Central Nervous System—Acute intoxication, myopathy, cerebral atrophy, Amnesic periods, Central pontine myelinosis, cerebellar degeneration.

## ALCOHOLISM IS A DISEASE:

Alcoholism is a disease which can be treated to be arrested. An alcoholic is not a sinner — bad or mad man. Neither is he immoral or weak willed, but a terribly ill person. The All India Council of Medical sciences classifies alcoholism as a disease. Alcoholism dose not affect the individual alone but all those who are close to him, his family and associates.

## TREATMENT FOR ADDICTION:

The first step in the management of an addict is to motivate him and his family for accepting treatment. Once this is achieved, one or two week is taken for 'detoxification' which is done under an institutional setting with medical supervision. This is to take care of the withdrawal symptoms which the person may develop during the initial period of abstinence. Following this, the person undergoes a treatment programme consisting of counselling, and individual and group therapy in a residential setting. The person is put on a drug deterrent agent like antabuse in alcoholism and discharged from the institutional setting. The best of the treatment programme have only about 25 to 30 percent of success rates.

## RECOVERY — THE A.A. WAY.

A.A. means Alcoholics Anonymous. The A.A. recovery programme is codified into 12 simple suggested steps, which is a synthesis of medicine, psychiatry, religion and basic commonsense. The main steps are:—

1) Admission of alcoholism.
2) Dependence upon some higher power.
3) Personality analysis.
4) Adjustment of personal relationship and
5) Working with other alcoholics.

The first and most essential step towards recovery is honesty. Having achieved the state of honesty, he takes the next step to believe in a power greater than himself. The next step is the making of a decision to relate to himself personally to that power. He makes a decision to turn his will and life over to the care of that Power. Recovery is a daily affair. As day follows day, and as life goes on, the relationship with the Higher Power grows.

## SIDDHA CURE FOR ADDICTION:

One of the reasons for addiction is low achievement and motivation. Personal autonomy to some people leads them into many troubles. Certian Siddha systems can be employed for arresting addiction. Of these, Asanas play an important role. It is very useful during pre and post stages of treatment. During pre—stage, it helps us to concentrate our mind and during the post—stage, it helps us to channelize our ideas without any distraction to return back to addiction. Pranayama also helps to feel fit both physically and mentally. Here are some important asanas which helps us to concentrate our mind.

a) Padmasanam
b) Vibareetha karani
c) Hatasanam
d) Sarvangasanam
e) Mayurasanam
f) Seerashasanam
g) Santhiasanam.

## CONCLUSION:

Life is not just one ecstatically happy for the recovering alcoholic. Troubles affect him as they do all other humans, but his response is rational. He accepts realities as truth and tries to adjust himself to live with it. Remember — Confidence will come with knowledge and practice.

# எளிய அனுபவ மருத்துவம்

M. SASI KALA Final year.

1 **தலைவலிக்கு:-** வெள்ளைப் பூண்டை அரைத்து நெற்றி, பொட்டில் தடவ நீங்கும்.

2 **ஜலதோஷத்திற்கு:-** படுக்கைக்குப் போகும் போது ஒரு வெங்காயத்தை தின்று விட்டு சுடு தண்ணீர் பருகினால் தீரும்.

3 **முகப்பருவிற்கு:-** (i) புனுகை தடவ விரைவில் பழுத்து உதிர்ந்து விடும்.
(ii) திரு நீற்றுப்பச்சிலையை அரைத்துப் பூச நீங்கும்.

4 **சொறி சிரங்குக்கு:-** அறுகம்புல்லை மஞ்சள் சேர்த்தரைத்துப் பூச போகும்.

5 **புண் புரை நீங்க:-** கடுக்காய் சூரணத்தை விளக்கெண்ணெயில் குழைத்துப் போட்டு வர குணமாகும்.

6 **அம்மை வடு மறைய:-** கைப்பிடியளவு கறிவேப்பிலை, 15 gm கசகசா, 7 gm கஸ்தூரி மஞ்சள் இவற்றை மை போலரைத்து காலை வேளை முகத்தில் தடவி அரை மணி நேரம் ஊறிய பின் கழுவி விட வேண்டும். இவ்விதம் 15 நாள் செய்தால் அம்மை வடு முழுவதும் மாறிவிடும்.

7 **சதை வளர்ந்து பருமனாக:-** பொன்னாங்காணிக் கீரையை துவரம் பருப்புடன் சிறிது நெய் சேர்த்து சமைத்து உண்டு வந்தால் மூன்று மாதங்களில் பிடிக்கும்படி சதை வளர்ந்து வருவதைக் காணலாம்.

8 **பருமன் குறைய:-** பொன்னாங்கண்ணிக் கீரையை துவரம் பருப்புடன் சிறிது மிளகு சேர்த்து சமைத்து உண்டு வந்தால் மூன்று மாதங்களில் பருமன் குறைந்து வருவதைக் காணலாம்.

9 **பெரும்பாடு நீங்க:-** தும்பையிலையை அரைத்து எலுமிச்சம்பழ அளவு 30 ml நல்லெண்ணெயில் கலக்கி காலையில் மட்டும் 7 நாள் சாப்பிட பூரண குணம் தெரியும்.

10 **சூதக வயிற்று வலி நீங்க:-** 6 வேலிப்பருத்தி கொழுந்து இலைகளைக் கொண்டு வந்து அம்மியில் வைத்து அரைத்து காலையில் மட்டும் சாப்பிட்டு சிறிதளவு வெந்நீர் குடிக்க வேண்டும். இவ்விதம் 3 நாள் சாப்பிட தீரும்.

11 **மாலைக் கண் நீங்க:-** 400gm காரட்டை சாறு எடுத்து வடிகட்டி அதே அளவு தேன் சேர்த்து கலக்கி அடுப்பில் வைத்து சர்பத் பதம் வந்தவுடன் இறக்கி வாயகன்ற ஒரு சீசாவில் வைத்துக் கொண்டு காலை, மாலை 2 தேக்கரண்டி வீதம் சாப்பிட மாலைக் கண் குணமாகும். கண் பார்வை தெளிவடையச் செய்யும். புதிய இரத்தத்தை உற்பத்தி செய்யும். இடுப்பில் தோன்றும் வலியை போக்கி இடுப்புக்கு நல்ல பலம் தரும்.

12 **இரத்தக் கொதிப்பிற்கு:-** (i) ½ வெள்ளை பூண்டை சிறிது சிறிதாக நறுக்கி ஆழாக்குப் பசுவின் பாலில் காய்ச்சி இரவில் சாப்பிட நீங்கும்.

(li) வெள்ளைத் தாமரைப் பூ ஒன்றை அளந்து முறைப்படி கஷாயமிட்டு (¼ ஆக) தேன் ஓர் அவுன்ஸ் கலந்து குடித்து வர குறையும்.

13 **இள நரை தீர:-** செண்பகமொட்டு, பூலாங்கிழங்கு, கோஷ்டம் இவை வகைக்கு 10gm, செம்பரத்தைப்பூ (காய்ந்தது) 100gm, வெந்தயம் 20gm (முளை கட்டி வைத்தது) இவற்றைப் பொடித்து ½ கிலோ நல்லெண்ணெய் or தேங்காயெண்ணெய் கலந்து வெய்யி லில் நன்கு சூடாகும் படி 5 நாட்களுக்கு வைத்து தினமும் தலைக்கு தேய்த்துக் கொள்ள வேண்டும். வாரம் 1 முறை வெய்யிலில் வைப்பது நலம். இதனால் இளநரை, மயிர் உதிர்தல், வெடித்தல், பொடுகு, கண் எரிச்சல் முதலியன நீங்கும்.

14 **பொடுகு தீர:-** பொடுதலைச் சாற்றை நல்லெண்ணெய் or தேங்காய் எண்ணெய் கலந்து வெயிலில் தண்ணீர் சுண்டும் வரை வைக்க வேண்டும். இதனை தினமும் தலைக்குத் தடவி வாரிக் கொள்ள வேண்டும்.

15 **படுக்கைப புண் நீங்க:-** குப்பைமேனி இலை, மஞ்சள் சமன் கூட்டியரைத்துப் பூசி வர புண் ஆறும்.

# Womb To Tomb

This mortal life is a journey between womb and Tomb
The womb is the beginning and the tomb is the end.

Both are in the hands of God. Both are the beginnings of a life — One mortal and another eternal. The main differences which are taking place in the womb and the tomb

Here the fusion, there the fission
Here the production, there the destruction
Here the formation, there the putrefaction
Here the addition, there the reduction
Here the circulation, there the obstruction
Here the mobilization, there the immobilization
Here the articulation, there the dislocation

But in both there is no respiration
We can escape from justification only by salvation

D. Premila Grace

# வியர்வைக்குப் பூச்சூட்டுவோம்.

1 நாளெல்லாம் பாடுபட்டு
பிறர் மனை விளங்கவைத்தாலும்
அவன் வீட்டில் விளக்கெரிக்க
கண்ணீரைத் தவிர எதுவுமில்லை.

ஏராயுத மேந்திப்
போராடும் உழைப்பாளி
தன் வயிறு நிறைந்திட
கஞ்சிக்கோ வழியில்லை.

இந்த
மந்தை ஆடுகளின்
வயிறு புறக்கணிக்கப்பட்டு
காம்புகள் மட்டுமே நேசிக்கப் படுகின்றன

இவர்களின்
வியர்வை கூட
எஜமானரின் அனுமதியோடு தான் கீழே விழுகிறது.

இவர்களின் வியர்வைக்குப் பூச் சூட்டுவோம்
ஏனெனில்
அவை மட்டுமே
உழைப்பவனுக்கு மதிப்புக் கொடுத்து
அவன்
காலடியில் விழுந்து
வணக்கம் செலுத்துகின்றன.

**இசக்கிப் பாண்டியன்.**

# தில்லு முல்லு

... ... தென்றலாக
வரும் போது
தேவையில்லை என்றார்கள்.
புயலாகப்
புறப்படும் போது
பூச்செண்டுகளுடன்
கண்ணீர் வடிக்கின்றார்கள். ... ...

**செண்பக விநாயகம் III**

# இளைஞர் குலம் எழுந்திடுக

வரதட்சனை ஒழிந்திட இளைஞர் குலம் எழுந்திடுக!

இருமனங்கள் இணைவதுவே திருமணமாம் அந்நாளில்
திருமணமும் வாணிகமாய் திரிந்து விட்ட இந்நாளில்
கரும்பைத் தின்பதற்கும் கனிதனை சுவைப்பதற்கும்
அருமை விலை கேட்பார் போல் அழகு மகள் தனை மணக்க
வரனு... தட்சணையாய் வழங்கும் பணம் என்பார்
பொன்னாக பொருளாக பலப்பல வகையாக
கண்ணான பெண்ணுடனே கடத்திடவே முயல்கின்றார்!
வறுமை நிலை காரணமாக வழங்கு பொருள் இல்லாமல்
வாடியே நின்றிடும் வனிதையர் பலருண்டு
மணம்பேசி முடிக்கும் நாள் மணநாள் அன்றும்
தக்கபலன் தராத தகவிலா காரணத்தால்
கடிமணத்தை நிறுத்துகின்ற கல்நெஞ்சக்காரர்களும்
கணக்கிலர் இந்நாட்டில் வாழ்கின்றார் இந்நாளும்
மணம் முடித்து சென்றபின்னும் மங்கைதனை பொருளுக்காய்
வாட்டியே வதைத்திடும் வன்நெஞ்ச பாவியர்
மாமியார் வடிவிலும் மணாளன் வடிவிலும்
உலவியே திரிகின்றார் உருவிலே மனிதராய்
மாமியார் சமைக்கும் காஸ் வெடிக்காத அடுப்புகள்
மருமகள் சமைத்தால் வெடிக்கும் மாயம்
நாளும் காண்கிறோம் நாளிதழ் செய்தியாய்
கண்போல் காத்து பேணிட வேண்டிய பெண்மையை
எரிக்கும் நிலை பெரும்பாவ கொடுமைதனை
சட்டங்கள் தண்டனைகள் சதிகாரம் இவர்தமை
சந்தியில் நிறுத்தி சதிராடி நின்றாலும்
சமுதாய மனமாற்றம் சத்தியமாய் தேவை இன்று
இளைஞர் சமுதாயம் இக்கொடுமைதனை எதிர்த்து
அறப்போர் தொடங்கினால் மறக்கொடுமை இது ஒழியும்
மாண்புகள் சேர்ந்திடும் மணித்திரு நாட்டில்!
இளைஞர் குலம் எழுந்திடுக;

முத்தமிழ்ச் செல்வி . எம். பி,
நான்காம் ஆண்டு பி.எஸ்.எம்.எஸ்

# கண்ணில் விழுந்த கனல்

(டாக்டர். க ஜகந்நாதன். பயிற்சி மருத்துவர்)

வியர்வை முத்துக்கள் ஆறெனப் பெருக்கெடுத்து கடலில் சேர
உப்புச் சுவை அளித்திட்டவர்கள் பெருந்தலைவர்கள்; மேன்மக்கள்:

அன்னையின் கண்ணீரை துடைத்துவிட்டு
அடிமை விலங்கினை உடைத்தெறிந்து
நள்ளிரவிலே சுதந்திரம் அன்றுதான் வாங்கினர்.
அவிழ்த்த கூந்தலை அன்னை முடிந்த நாளும் அன்றுதான்

தூத்துக்குடி முத்தெடுத்து, கோஹினூர் வைரம் வைத்து
கோலாரின் தங்கம் உருக்கி,மாலையாக அணிந்ததும் அன்றுதான்.
காஷ்மீரக் குங்குமப்பூவில், காஞ்சீபுரப் பட்டுடுத்திய நம் அன்னை
சிந்துவில் ராகம் இசைத்து, நருமதையில் தாளம் சேர்த்து
காவிரியில் காதுவைத்து, கேட்டு மகிழ்ந்ததும் அன்றுதான்.

செந்தமிழ்நாட்டில் பரதமாடி, கைரளியில் கதகளி வைத்து
குமரியிலே சிதறிய சிலம்பொலிக்கு, இமயத்தில் பட்டுவந்த எதிரொலியில்
கீர்காட்டு சிங்கங்கள் மெய்மறந்ததும் அன்றுதான்.

அவள் மகிழ்ச்சியில் நீடிப்பு இல்லை. ஏன் என்னுள் கூட.
பௌர்ணமியென வந்தது அமாவாசையாகிப் போனது

ஒருவேளை சோற்றுக்குத் திண்டாடி
எதிர்காலம் நல்லது என கானல் நீர் காணும் ஏழை மக்கள்,
பிச்சைக்காரர்கள் என்றொரு பெயராம்,
ஆரணிபட்டு, ஆமதாபாத் கோட்டு, கனவில் மட்டும் போட்டு
நனவில் கந்தைகட்டி வாழும் மக்கள் சந்தை.
இருட்டின் தழுவலிலே, பரந்த நிலமே வீடென
இருண்டுகிடக்கும் மனத்துடன், இருட்டை கழிக்கும் நாடோடிகள்.
ஊரான் பிள்ளையை ஊட்டிவளர்த்து
தன்னை வளர்க்க மறந்து, கைகட்டி சேவகம் செய்யும் கொத்தடிமைகள்,
சந்திரன் வந்ததும் சந்தடியிலே வைத்து
சதையினை விற்று சலிப்புடனே சம்பாதிக்கும் கற்புக்கு அரசிகள்!

மதுவெனும் அரக்கனின் பிடியில் சிக்கித்தவிக்கும் மானிடன் தன்
மாதுவின் மயிரைப்பிடித்து நடுவீதியில் நகர்வலம் வரும் காட்சி.
எரிகின்ற வீட்டிலே எண்ணெயூற்றும் அரசியல் வாதிகள், அவர்கள்
கிடைத்தது கிடைக்கட்டும் என்று கொள்ளையடித்துச் செல்லும் வேஷதாரிகள்.
மக்களின் தேவை மன்னனின் சேவை — மாறி
மன்னனின் தேவை என்றாகிவிட்டது பார்.

பாரதம் என்றால் அன்று புல்லரிக்கும் என்றனர் — ஆனல் இப்படி
மனிதப் புற்களை கொன்று களையிழந்து நிற்குமென
நான் எண்ணியது கூட இல்லை.
வேண்டாத விந்தைகள்; நம்மிடையே சாதிசமய் சண்டைகள்.
வடக்கிலும், தெற்கிலும், கிழக்கிலும், மேற்கிலும்
எல்லையைச் சொல்லவில்லை, தொல்லையைச் சொல்கிறேன்.
தற்காப்பு என்ற நிழலிலே படுத்துக்கிடக்கும் ஆயுதக்கூட்டம்
அணுக்களின் கண்களோடு நம்மை முறைத்துதான் பார்க்கிறது.
அமைதி என்ற சோலை அழிந்து
பாம்பின் நிழலிலே படுத்துதான் உறங்குகிறோம்.

ஆந்திராவில் வெள்ளம், வங்கத்தில் வெள்ளம்; வேறொன்றுமல்ல
ஆத்மாவின் கவலையில் அன்னை அழுது வடிக்கும் கண்ணீர்தான்.
வங்கக்கடலில் கொத்தளிப்பல்ல; அவள் மனக்குமுறலின் பிரதிபலிப்பே

பூட்டிய சங்கிலியை உடைத்தெறிவோம்.
அன்னைக்கு விடுதலை அளிப்போம்.
விந்தியமலை உச்சியின் மீது
ராஜஸ்தானி இசை இசைத்து
குற்றாலத்து தேனருந்தி, எல்லோரும் கைகோர்த்து
அஸ்ஸாமின் தேயிலை போல்
ஓடிசியாடி ஒற்றுமையாக இருந்திடுவோம்.
மனிதத் தூண்களின் மீது
பாரத மண்டபம் அமைத்திடுவோம்.

---

# கதிரவன்

வே. மாசிலாமணி இறுதியாண்டு. பி. எஸ். எம். எஸ்.



விடியும் நேரத்தில்
விளக்கொளியாய் ஒளிக்கின்றாய்.
விடிந்த பின்
விண்மீனை மறைக்கின்றாய்.
பகல் நேரத்தில்
பரிதவித்து அலைகின்றாய்.
அழகிய மாலையில்
அந்திக் காற்று வீச அனுமதியளிக்கின்றாய்.
அந்தி சாயும் வேளையில்
உன் வீடு திரும்புகின்றாய்
அகிலத்தில் நீயும்
ஒரு அயராத உழைப்பாளிதானோ !

# சிரிப்பு நோய் — கற்பனே

**வேறுபெயர்கள்**

இளிப்பு, பல்லேக் காட்டல், அசடுவழிதல், புன்னகை

**இயல்:** வாயின் உதடுகள் பிரிந்து வாயின் அனைத்து பற்களும் தெரியும் படியாய் மிகுந்த சத்தத்துடனும் கண்கள் சுருங்கி, மிகுந்த நிலேயில் கண்ணில் நீர் வடிதலேயும் உண்டாக்கும் இயல் புடைய நோயாம்

**நோய் வருஞ்வழி:**

சந்தோஷம்
பிறரைகேலிபண்ணல்
அழகிய பெண்கள் ஆண்களே பார்க்கும் போதும்
கற்பனேயின் போதும்
தர்மசங்கடமான நிலேகளிலும்இந் நோய்வரும்.

**முற்குறி குணங்கள்:**

உதடு பிரிதல்
பற்கள் வெளியே தெரிதல்
முகம் சிவத்தல்

**பொதுகுறி குணம்:**

கண்களில் நீர்வடிதல்
மூக்கு வெடைத்தல்
உடல் குலுங்குதல்
தலே குனிதல்
மிகுத்த சத்தம் சிலவேளே உண்டாதல்

**நோய் எண்: 15**

| | |
|---|---|
| வளி | ஆணவம் |
| அழல் | வெட்கம் |
| ஐயம் | ஆனந்தம் |
| முக்குற்றம் | சோகம் |
| இயற்கை | தெய்வீகம் |
| செயற்கை | மந்தகாசம் |
| அசட்டு | நமட்டு |
| ரம்மிய | |

**தீரும் தீராதவை**

அசட்டு
நமட்டு
ஆணவம்
செயற்கை

இவை தீராது ஏனேய 11 ம் தீரும்

**முக்குற்ற வேறுபாடு:**

வளியும் ஐயமும் கெட்டு அழல் அதிகப்பட்டு மேல் நோக்குகால் கேடடைந்து கூர்மனும் கெடும்.

**நாடி நடை**

1. வழிசல் சிரிப்புக்கு வளி நாடியும்
2. அசட்டு சிரிப்புக்கு அழல் நாடியும்
3. மந்தகாச சிரிப்புக்கு சேத்துமநாடியும் மிகுந்துகாணும்.

"வாதமெனும் நாடி தோன்றில—வந்திடும்
வழிசல் எனும் சிரிப்பு தானும்.........
"உரைப்பான அழல் நாடி தோன்றுமாகில்
உண்டாகும் அசட்டு சிரிப்புதானே......
"தானமுள்ள சேத்துமந் தானிளகில்
தோன்றிடுமே தெய்வீக சிரிப்புதானே...
—அபத்த நாடி.

**உள்மருந்து மருத்துவம்**

**குடிநீர்:** மிளகாய், மிளகு வகைக்கு 1பலம் எடுத்து குடிநீரிட்டு. 5 நிமிடத்திற்கு 1முறை தரவும்

**அளவு:** 1படி

**வெளி மருந்து** (கண்ணிற்குகலிக்கம்)

வெங்காயத்தை அரைத்து கண்ணிற்கு கலிக்கமிடவும்.

**ஆக்ராணம்:** சுக்குபொடியும் சீயக்காய் பொடியும் சமஅளவு கலந்து மூக்கில் ஆக்ராணம் செய்யவும்.

**பிறமருத்துவம்:**

வாயில் Plaster ஒட்டுதல் (பட்டிகட்டல்)

**அறுவைமருத்துவம்:—**

பல்லே சுத்தியலால் உடைத்தல்,

**குறிப்பு:** -

எல்லாமே கற்பனே- மருத்துவம் ஏதும்முயசிக்க வேண்டாம்.

# AS THEY SEE LIFE.

A Student of Physics:-
Life is a pendulum which
Swings between joys and sorrows

A Botanist Declares:-
Kind hearts are the gardens, where
Kind thoughts are the roots
Kind words are the blossoms, so
Kind deeds are the fruits,

A Mathematician would caution:-
Draw a circle with God as the
Centre and Love as Radius

A Student of geography greets:-
Let your joys be deep as the
Ocean, so that yoor sorrows
Seem, the foam so light on
Its top.

A Chemist Simplifies:-
Precipitate your sorrow, filter
The excess, evaporate it to
Dryness and you get the
Crystals of joy.

A Literary genius opines:-
Life is neither a tempest
Nor a midsummer night's dreams
More often it is a comedy of errors
And you may take it as you like it.

A. John Michael Joseph Vaiz
I B. S. M. S.

# புதுக் கவிதைகள்

## மழை

மின்னல்
கண்ணடித்த
காரணத்தால்......
மேகமங்கை
கற்பிழந்து
கண்ணீர் சிந்துகிருள்!

## வயோதிகம்

தலைப் பிரதேசத்தில்
கார் காலம் முடிந்து
பனிக் காலம் ஆரம்பம்!

## புல் புலம்புகிறது

இரவெல்லாம் விழித்திருந்து
பாதுகாப்பாய் வைத்திருந்த
வெண் முத்துக்களையெல்லாம்
விடிந்ததும் திருடிவிட்டான்......?
கைது செய்......
அந்தச் சூரியனை......!

## நட்சத்திரங்கள்

ஆகாய அரங்கத்தில்
நிலவுத் தாரகை — தன்
முகில் ஆடையை
அவிழ்த்து விட்டு
நிர்வாண பவனி வருவதை
கண்சிமிட்டி ரசிக்கும்
ரசிகர் கூட்டங்கள்......!

[எஸ். கணேஷ் குமார்]
இறுதியாண்டு

## Things necessary to keep our body in good health:

1 The body must have proper food and drink.
2 The body must have abundance of sunlight and fresh air.
3 The body must Constantly get rid of its waste matter.
4 The body must be protected so that it will not be injured by cold or heat.
5 The body must have proper exercise and rest daily.
6 The body must be constantly protected against the entrance of poisons and disease-producing germs,,

M. EZHILARASI Final B.S.M.S

# சித்தர்கள் கருத்துக்கள் நவீன பார்வையில்.

**T. சத்திய மூர்த்தி**
இறுதியாண்டு பி.எஸ். எம்.எஸ்

உலகப் பொருட்கள் அனைத்தும் சடம், அசடம் என்று இரண்டு வகையாக உள்ளன. இவை அனைத்தும் சக்தி, சிவம் சொரூபமாய் உள்ளது. இப் பொருட்களின் ஆன்மாவில் சக்தி செயல்படும் நிலையில் இருப்பின் அசடம், செயல்படாத சூட்சும சுழுத்தி நிலையில் இருப்பின் சடம் என்று கூறப்படும்.

இதையே தான் இன்றைய நவீன கருத்துக்கள் "All bodies are have matter and Energy. But all forms of energies are not activated in nature, they are in all in activated energy" என்ற இயற்பியல் கருத்துக்களாக்கி கூறுகின்றன.

உடம்பு இல்லாவிடில் உயிர் செயல்பட இயலாது. உடம்பை அசைக்க உயிரின் நினைப்பே போதுமானது ஆகும். உயிருக்கு தேவையான உடம்பு அதன் வினைக்கேற்ப அமைகிறது. உயிர் நினைத்தல், அறிதல், செயற்படுத்தல் என மூன்று நிலைகளை அடைகிறது.

இங்கு கூறப்பட்ட உயிர் Energy எனவும், உடம்பு Matter எனவும் தற்போதைய கருத்துக்கள் கூறுகின்றன.
"The matter is activated by an energy. The energy is produced by the stimulation The energy has 3 stages ie 1. production 2. Maintanence 3. Activation.

இந்த உயிராகிய சக்தியே உலகின் வடிவம்; உலகின் காரணம்; உலகின் குணம், இந்த உலக இயக்கத்திற்கு ஆதாரமான சக்தியை பெண்பாலாக உருவகப்படுத்தி கூறியுள்ளனர் நமது சித்தர்கள்.

அணுக்கள் திரள்வதும், விரிவதுமாகிய வகையினை ஆராய்ந்து அறிந்து தெரிவது உயிர். நில அணுக்கள் வன்மையுடையதாக விளங்கும். நீரணுக்கள் குளிர்ச்சியான தன்மையுடன் சுவையுடையதாகும் தீ அணுக்கள் எரிப்பதும், மேல் நோக்கி எழும் இயல்புடையதும் ஆகும். காற்று அணுக்கள் அசைத்தலை செய்யும்.

இவ்வாறு ஒவ்வொரு அணுவும் ஒரு வித ஆதி அந்தமற்ற அநாதி நித்ய அணுக்களாக விளங்குகின்றன. இவை ஒன்றுக்கொன்று திரிபடைவதும் இல்லை. இவ்வாறு உள்ள அணுக்கள் பொருந்தும் தன்மை குறித்தே பெயர் கூறப்பட்டு வரும்.

சுருங்கக் கூறினால் இன்றைய நவீன அறிவியல் கருத்துக்கள் கூறுகின்ற "அணுவினைக் காணமுடியாது. அரைக்கோடி அணுக்களை வரிசையாக நிற்கவைத்தால் அவை அனைத்தும் ஒரு முற்றுப் புள்ளிக்குள் அடங்கி விடும்" என்கின்ற கருத்துக்களை மேலே கூறப்பட்ட நமது சித்தர் கொள்கை விளக்கும்.

நமது சித்தாந்திகள் அணுவினை பிளந்து இன்றைய கொள்கைகள் கூறும் Electron, proton, Neutron கொள்கையினை பதி, பசு, பாசம் வாயிலாக மிக எளிதாக விளக்கியுள்ளனர்.

இவ்வாறு தன்மைகள் கொண்ட அணுக்களாலான பொருட்களில் சக்தி மாறும் இயல்புடையது. "சக்தி உறைந்து கிடப்பது சடம்; சடம் உருகி வழிவதே சக்தி" என்றனர் சித்தர்கள். இதனையே "Every form of energy can be converted into another form of energy" என்று நவீன அறிவியல் கூறுகிறது. ஆனால் ஒரு போதும் சக்தி அழியும் தன்மை கொண்டதல்ல.

தம் யோக வல்லமையால் உலகை படைத்து, காப்பாற்றி, அழித்துவரும் காரணப் பொருளாகிய மூல முதற் பொருளை அணுவின் அணுவாக நமது தலைமை சித்தன் சிவபெருமான் உபதேசித்தார். பின் நாளில் வந்த அவரது மாணாக்கர்கள் சிவனது பெயரை முழங்கவும் காரண காரிய பொருளாக சிவம் எனப் போற்றி வந்தனர். இதுவே உண்மை விளக்கம் ஆகும்.
இவ்வாறான அணுக்களால் ஆன இவ்வுலக உயிரின, உயிரற்ற பொருட்கள் அனைத்தும் பஞ்ச பூதங்களால் ஆனவை.

இப் பஞ்ச பூதங்கள் அருவத்திலிருந்து உருவப் பொருளாக மாறும் காரியத்தை பஞ்சபூத பஞ்சீகரணம் என்றனர் சித்தர்கள்.

## உலகத் தோற்றம்

உலகத் தோற்றம் பற்றி கூறுமிடத்து "உள்ளது போகாது, இல்லது வராது" என்பது சித்தரது அடிப்படை தத்துவம்.

இத்தத்துவத்தின்படி மாற்றத்தாலாயது உலகம். மாற்றம் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு அணுவிலும் அணுவுக்கு அணுவாக நிகழ்கிறது. இவ்வாறு கூறும் கொள்கையின்படி ஒன்று இன்னொன்றாய் தோன்றுவதே மாற்றம். இவ்வாறு நிகழ்வதே செயல்களுக்கு ஆதாரமாய் உள்ளது. காரணம் இல்லாமல் காரியம் நிகழ்வதில்லை.

By the modern thory, "the world is changing always. These changes are due to convertion of all matters into another forms; otherwise, the world is not functioning The Newtons third law, "Every action has an equal and opposite reaction" prove the above theory.

உயிர்களின் பிறப்பை பற்றி நமது சித்தர்களது கருத்துக்கள் மிகவும் அருமையானவை. உயிர் தோற்றத்தை பற்றி கூறும் போது "முதன் முதல் உயிரினம் நீரில் தான் தோன்றிற்று. இதற்கு காரணம் பூமி குளிர்ந்து உயிர்கள் தோன்ற சூழ்நிலை ஏற்பட்டவுடன் நீர்தான் உயிர் தோன்ற இடம் கொடுத்தது. நீரில் அவற்றின் எண்ணிக்கை அதிகரிப்பால் வாழ்க்கை போராட்டம் ஏற்பட்டு சில மடிந்தன. சில நிலப்பரப்பில் ஏறி வாழ ஆரம்பித்தன. பின் அச்சூழ்நிலைக்கேற்ப உயிரினங்களின் உடலில் வியக்கத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டன. பின் பலவாறான வாழ்க்கை முறையால் மனிதன் வரை பரிணாம வளர்ச்சி ஏற்பட்டது" என்ற கருத்தை விளக்க வந்ததே நமது பத்து அவதாரக் கதை.

முதல் அவதாரம் — மீன் — (மச்சாவதாரம்)
நீர் வாழ்வன

இரண்டாவது அவதாரம் — ஆமை
(கூர்மாவதாரம்) நீர் நில வாழ்வன

மூன்றாவது அவதாரம் — பன்றி
— (வராக அவதாரம்) நில வாழ்வன

நான்காவது அவதாரம் — மனிதனும் மிருகமும் சேர்ந்த உருவம்
— (நரசிம்ம அவதாரம்)

ஐந்தாவது அவதாரம் — குள்ள மனிதன்
— (வாமனவதாரம்)

ஆறாவது அவதாரம் — வில் வலிமை பெற்ற மனிதன் — (பரசுராம அவதாரம்)

ஏழாவது அவதாரம் — நற்குணம் பெற்ற மனிதன் — (ராமவதாரம்)

எட்டாவது அவதாரம் — உழவுத்தொழில் வன்மை பெற்ற மனிதன்
— (பலராம அவதாரம்)

ஒன்பதாவது அவதாரம் — உடல், உள்ளம் அறிவு பெற்ற மனிதன்
— (கிருஷ்ணாவதாரம்)

பத்தாவது அவதாரம் — கல்கி அவதாரம்.

இவற்றினை கூர்ந்து கவனித்து கற்பனையை களைந்து பார்த்தால் பரிணாம வளர்ச்சியையும், மனித வளர்ச்சியையும் கூறியது, வெள்ளிடை மலையாக விளங்கும். மனித வளர்ச்சியை இவ்வாறு உடல் வலிமை, வில் வலிமை, பின் அறிவு வலிமை பெற்றதாக கூறுவது அருமையான விளக்கமாகும்.

இதனையே நவீன கருத்துக்கள் "முதல் ஒரு செல் உயிரி அமீபா, கிளாமிடாமோனஸ், பாரமீசியம் போன்றவையே உலகில் தோன்றிய முதல் உயிரினங்கள். உயிருள்ள உயிரணுக்களிலிருந்து பல புதிய உயிரணுக்கள் உண்டாவதில்லை. ஒரு தாவரம் அல்லது பிராணியின் உடல் ஒரே சிறு அணுவாக தோன்றி பின் பலமுறை பிளவுபட்டு வளர்ந்து பெருகி தாவரமாகவோ, பிராணியாகவோ வாழ்கிறது," என்று கூறுகின்றன.

இவ்வித பரிணாம கோட்பாட்டிற்கு ஆதாரமாக உடலியலும், கருவியலும், தொல்லுயிரியலும் சான்றுகளாக டார்வின்கோட்பாடும், டிவிரிஸன் திடீர் மாற்ற கோட்பாடும் விளக்கம் தருகின்றன.

இனி மனித வாழ்க்கை, கரு உற்பத்தி இவைகளைப் பற்றிய நமது சித்தர் கருத்துகளை, நவீன கருத்துக்களுடன் ஒப்பிட்டு நோக்குவோம்.

**மனித வாழ்க்கை — கரு உற்பத்தி**

விந்தாகிய சுக்கிலம் ஊறும் தன்மை கொண்டது. அதாவது The sperm has motility. என்ற இன்றைய கருத்தினை,

"...... விந்தங்கே யூறும் போது
பாயுமப்பா வன்னியோடு வாயுந்தானே

—என்ற பாடலின் வரிகள் மூலம் விளக்கலாம்.

வாயு இயக்கங்களுக்கு காரணமாக இருக்கின்றது. வன்னி மூல காரணமாக விந்தினை இயக்குகிறது. இதுவே கருத்தரிக்கும் வல்லமை உடையது.

According to modern Theory, "The spermatozoas are motile. The motility is derived from the rapid vibration of their tails".

இவ்வாறு ஊர்ந்து செல்லும் விந்து நாதத்துள் பாய்ந்த இடம் "பாய்ந்த வெளித் தமர் போல" என வைத்திய சாரதம் கூறுகிறது. இதனால் நாதத்தில் துளை உள்ளது என்பது தெளிவாகும்.

According to modern Theory, "The spermatozoa enters the mature ovum, the point of entry being closed at once to prevent the admission of other spermatozoa".

இவ்வாறு விந்தும், நாதமும் கலக்கும்போது

"சுக்கிலத்தில்சுரோணிதங் கலக்கும் போது
பூந்திடும் வியாதி மூன்றும்"

— என தன்வந்திரி கூறுகிறார்.

இங்கு கூறும் வியாதி என்பது வினைகள். அவை 1) சஞ்சிதம் 2) பிரார்த்தம் 3) ஆகாமியம்.

இக்கருத்துகள் நவீனயுக கருத்தின்படி

"The coincident with or proceding the definition of Chromosome the Centrosome divides into two and form each nucleus.

The Chromosomes are responsible for hereditory Charecters. The Chromosomes Contain genes.

The Immunity and Charecters are setled at embryo stage."

கருவாகி வளரும் காலத்தில் அமைக்கப்படும் அமைப்பினை விளக்கும் போது,

"அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில்"

— என கூறும் பாடல் இரு விதமான கருத்துகளை தெளிவாக அறிவுறுத்துகிறது.

(1) அண்டமாகிய கருவில் அமைக்கப்படும் வன்மையே அக்கரு வளர்ந்து பிண்டமாகி வளர்ந்து வாழ்ந்து முடிக்கும் வரை செயல்படும்.

(2) அண்டமாகிய வெளியில் உள்ள மாறுபாடுகளை யொத்த மாறுபாடுகள் பிண்டமாகிய உடலிலும் செயல்படும்.

இதுவே பின் வருமாறு நவீன கருத்துகள் கூறுகின்றன.

(1) Some persons have congenital anomelies. The Congenital anomelies are never cured by any treatment.

(2) The climatic changes are affect some persons that leads to patholcgical changes. That change occur at regular climate

These are due to their immunity; and Body Build. The immunity is devided in to 3 types

(1) Acquired immunity
(2) Congenital immunity
(3) Induced immunity.

இக்கருத்துக்களே நமது சித்தர்கள் கூறும் (1) செயற்கை வன்மை (2) இயற்கை வன்மை (3) கால வன்மை என்பனவாகும்.

மனிதன் ஸ்தூல உடல், சூக்கும உடல் என 2 உடல்களை கொண்டுள்ளான். இவை ஒன்றுக்கொன்று தொடர்புடையன. இதனால் தான் மனிதன் நோய்வாய்படின் மணி, மந்திரம், அவிழ்தம் மூலம் பிணி தீர்த்தனர், ஸ்தூல உடல் பிணியால் பிணிக்கப்படும் போது சூக்கும உடலும் பாதிக்கப்படும். இந்நிலை தீருவதற்கு சூக்கும உடலுக்கும் மருத்துவம் புரிந்து ஆன்ம அமைதி தருபவனே மருத்துவன்.

In modern medicine, "A patient suffering from a disease Chronically, will become a psycohic, due to this inferiorty, he wants to be treated both psychollogically and organically." It was dealed early by our siddhars.

இவ்வாறு நமது சித்தர்கள் கருத்துக்கள் ஒவ்வொன்றுக்கும் தற்போது நவீன வடிவம் கொடுத்து விளக்க ஆரம்பித்துள்ளனர்.

இதிலுள்ள பல்வேறு சிறப்புகளைஎடுத்துரைப்பதே சித்தமருத்துவத்திற்கு நாம் ஆற்றும் கடமையாகும்.

## "நீ அவளுக்காக"

அலைபிரியன் என்ற R. கிருஷ்ணமூர்த்தி.
டி. பார்ம்

நண்பா ... ... ... ... !
அவள் பார்க்கிறாள் என்பதற்காக — நீயும்
பார்த்து விடாதே ... ... ... !
பின்னர், நீ
அவளுக்காக பரிதவிக்க நேரும்.
அவள் உருகுகிறாள் என்பதற்காக — நீயும்
உருகிவிடாதே ... ... ... ...
பின்னர், நீ
அவளுக்காக உன் வாழ்வை கருக்கிவிட நேரும்
அவள் காதலிக்கிறாள் என்பதற்காக — நீயும்
காதலித்து விடாதே ... ... ... ... !
பின்னர், நீ
அவளுக்காக கண்ணீர் சிந்த நேரும் ... ... ... !

## "ஏ பனித்துளியே"

அலைபிரியன் என்ற R. கிருஷ்ணமூர்த்தி
டி. பார்ம்.

ஏ ... — பனித்துளியே!
நீ என்னதான் கண்ணீர் மழை பெய்தாலும்
இந்த பன்னீர்ப் பூக்கள் உனக்கு சொந்தமல்ல ...
ஏனெனில், உன் காதலியின் கவர்ச்சிதான்

ஏ .. — பனித்துளியே
நீ பெய்வதால் எங்களுக்கெல்லாம் வெறுப்புதான்
ஆனால், ஒருத்திக்கு மட்டும் விருப்புதான்
வேறுயார் ? உன் காதலி பூ தான்

## நான் விரும்பும் தூது

○ நான் காதலில் தோல்வி கண்டவன்
நிலவுப்பெண்மேல் காதல் கொண்டு
காற்றுத்தோழியை தூதனுப்பினேன்
அவள் கால்கள் மறந்த காரணத்தால்
தூது இன்றுவரை போய்ச் சேரவில்லை--

○ நான் காதலில் தோல்வி கண்டவன்
காற்றுப்பெண்மேல் காதல் கொண்டு
நிலவுத்தோழியை தூதனுப்பினேன்
அவள் தேய்ந்துகொண்டே சென்றதனால்
தூது இன்றுவரை போய்ச் சேரவில்லை.

○ நான் காதலில் தோல்வி கண்டவன்
அமைதி இருள் மேல் காதல் கொண்டு
நட்சத்திரத் தோழியை தூதனுப்பினேன்
சூரியத் தந்தை வந்ததனால்
தூது இன்றுவரை போய்ச் சேரவில்லை

○ நான் காதலில் தோல்வி........



சுபா, டி.பார்ம்

# FINE ARTS ASSOCIATION

## A REPORT

It was a golden era in the history of fine arts. The fine arts Association was born during mid'88 with the help of our beloved Principal, heading Dr. K. Palavesam M.D. As staff advisor. Mr. Baskarasethu final B. S. M. S. was elected as president, Mr. David solomon being its secretary, and Mr. Shenbaga vinayagam as Treasurer. Miss. Sasikala as Ladies Representative

It contained Mr. Sathyarajeswaran (I yr) Mr. Sharath Priyadev (II yr). Alexander Jesudoss (III yr). Miss Muthamizh selvi (IV yr). Mr. Jeganathan, Arun and Asokan from Final year as its committe members.

The Association bagged most of the prizes and praise in all the, musical. Literal, Dance events of all the competitions it took part. Some of the glimpses are given here:

**I Chinmaya yuva Kendra competitions:-**

a) Instrumental solo (light) — David soloman Ist prize

b) Instrumental solo (carnatic in guitar) David soloman IInd prize

**II FEMER'88 at Triunelveli Medical college.**

a) Instrumental solo (Drums) David solomon Ist prize

b) Debate Shenbagavinayagam III prize

c) Rangoli. Miss Latharani (III prize)

**III "Bharathi vizha" at PalayamKottai**

Vocal solo (Light) David solomon — Ist prize

**IV FESTIECCA'88 at Vadakkankulam S.A. Raja College.**

| | | | |
|---|---|---|---|
| a) Rangoli | Miss. Latharani | I | place |
| b) Makkolam | Miss, Sujatha | I | place |
| c) Painting | Miss. Latharani | I | place |
| d) Pencil drawing | Mr. Anbarasu | I | place |
| e) Vocal solo | Miss. Meenakumari | I | place |
| f) Short story writing | Mr. Prabhakaran | I | place |
| g) Essay writing | Mr. Shenbaga vinayagam | I | place |
| h) Collage | Latharani<br>Anbarasu | II | place |
| i) Poetry writing | Shenbagavinayagam | II | place |
| j) Instrumental solo | | | |
| i) Strings (guitar) | David Solomon | Ist | place |
| ii) Percussion (Drums) | David Solomon | Ist | place |
| k) **Orchestra :-** | Light western — | Ist | place |

**V Palay Comedy club competitions :-**

S. Asokan.
T. Babu.
A. Mohanakannan got the Ist prize for their comedy Drama "Gunfight Kadirvelu", IInd prise grabbed by Sivaraman & party for their silent drama.

**IV Youth Festival'88** (Zonal Level) at Kamaraj College, Tuticorin.

| | | |
|---|---|---|
| a) Dumb charades :- | S. Asokan<br>T. Babu<br>David solomon | Gold Medal |
| b) Cartoon drawing : | R. Rajasekaran | — Gold |
| c) Martial arts :- (silambam) | K. Veeramani | — Silver |
| d) Mono acting | T. Babu | — Silver. |
| e) Vocal solo (western) | David solomon | — Bronze |

**VII Youth Festival'89** :- (Finals at Srivilliputhoor Kalasalingam College)

**(University Level)**

| | | |
|---|---|---|
| a) Vocal solo (Western) | David solomon | Silver medal |
| b) Mono acting | T. Babu | Silver medal |
| c) Martial Arts (Silambam) | K. Veeramani | Bronze medal |

In Youth Festival an exclusive Interview was Recorded by All INDIA RADIO with David solomon, Asokan, and Babu for Dumb charades. This interview BroadCasted alongwith soul winning song of David solomon in ILAYABHARATHAM.

**VIII Rotary Club Competitions :-**

This competition started on 15th ends on 28th of, September 89. So far we got,

| | | | |
|---|---|---|---|
| Painting | — | Miss. Latharani | III place |
| Rengoli | — | Miss. Latharani & Jeyanthi | I place |
| Instrumental Solo | — | Balaji II Prize, Latharani | III Prize |

**IX Competition Conducted by Thazhai Cultural Academy—**

Mono acting = T. Babu III Place.

**Temperature :-**

This is the high light of Fine arts. At its very first competition itself it bagged the Ist prize in Festica'88.

In Marchival'89, organized by BEO Club, Temperature competed with many professional orchestras in the city and pridely lifted the winning Trophy & cups for Ist prize.

Temperature gave 3 programmes in AIR also. Temperature was the crown in College day & sports day celebrations of'88.

**The Temerature' people :-**

Key boards :- Sharath Priyadev
Bass guitar :- Alexander Jesudoss
Rhythm guitar :- David Sathyakumar
Violins & chorus :- Mr. Asokan, Mr. Kolappan & Sreedhar
Rotor Drums & Jazz Drums } David solomon
Tabla :- Sreedhar
Treble :- Selvaraj
Mirudhangam :- Balaji

Singers :- Dr. R. S. Ramaswamy
K. Alima
R. Ponnarasu
S. Loganathan
David solomon (western)

Organising assistance :- K. P. Mariappan.

Dr. R. S. Ramaswamy, Our senior singer has won many prizes in vocal solo in many competitions of Intercollegiate and University level in his undergraduate days.

This Temperature is Directed to Victory by the music "Genie" brisk & bright David Solomon.

Fine arts Association extends its excellence up to ALL INDIA RADIO Tirunelveli in the following :-

1) June'88 it gave a hot western music programme and Received lot of letter from many places.
2) Along with music, on August 14th Reformatory Drama on Drug addiction which impressed lot of its listeners.
3) Again in sept'88 it Brodcasted a new, strange programme titled "West meet east". A Thala vadhya Katcheri, Drums with Tabela, Mirudhangam & Violin. In this David solomon played "Carnatic" in western Drums.

In future, we have a Recording on Nov. a musical Drama programme. September we attended the 'Festieca'89" and won many prizes and over all shield.

Finally we thank the Principal who helped us a lot and the Vice Principal who took most interest in Fine arts.

*Secretary*
**David Solomon**

*President*
**D. Baskara Sedhu**

# ஒரு பயணம்

'அகில இந்திய கல்விச் சுற்றுலா'வில் கலந்து கொண்ட மாணவர்கள்.

'சுற்றுலாவே சிறந்த கல்வி' என்றார் மகாத்மா காந்தியடிகள்; அவரது மொழிப்படி சுற்றுலாவிலான அனுபவக் கல்வியைப் பெற்று மகிழ ஒரு முயற்சி; அம்முயற்சியின் விளைவினாலான ஒரு நெடும்பயணம்: அதுதான் 21 - 9 - 88 முதல் 18 - 10 - 89 வரையிலமைந்த எங்களின் 'அகில இந்தியக் கல்விச் சுற்றுலா'.

1988 - 89 ஆம் கல்வியாண்டின் இறுதியாண்டு B.S.M.S மாணவர்கள் மத்தியில் "நமது கல்லூரியினின்று அகில இந்திய அளவில் சுற்றுலா ஒன்று சென்று வரவேண்டும்" என்று ஏற்பட்டிருந்த நெடுங்கனவுக்கு 5. 8. 88 அன்று தேர்ந்தெடுக்கப்பட்ட 'சுற்றுலா அமைப்புக்குழு' நனவுப் பாலம் அமைத்தது. ஆசிரிய அமைப்பாளராக விரிவுரையாளர் Dr. V அருணாசலம் M. D (s), மாணவ அமைப்பாளராக திரு P. திருமுருக வெங்கடேசன், இணை அமைப்பாளர்களாக திரு.K·P இராமச்சந்திரன், திரு. G. ஆறுமுகம், திரு. A, D. சக்கரவர்த்தி, திரு. M. மலர்வண்ணன், திரு. V கண்ணன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டு, சுற்றுலாவுக்கான அடிப்படைச் செயல்திட்டங்களை திட்டமிட்டு, செம்மையுற நடத்தினர்.

மாணவர்களுக்கான விஷேச சலுகை பெற்று புகைவண்டி மூலம் 23 நாட்கள் உள்ளடக்கியதாக அமைக்கப்பட்ட, இந்த அகில இந்திய கல்விச் சுற்றுலாவில் சுற்றுலா அமைப்புக் குழுவினர் 7 பேருடன் திரு. A. பெரியசாமி, திரு. S. ரமேஷ், திரு. V. இராமர், திரு. S. பழனி, திரு. P. பார்த்திபன். திரு. K. ஜெயராஜ், திரு. G. குமாரராஜா, திரு. K. ஜெகன்னாதன், திரு. G. பாலசுப்பிரமணியன் ஆகியோருமாக மொத்தம் 16 பேர் பங்குபெற்றனர்

ஏற்றமிகு இச்சுற்றுலாவினை 21 - 9 - 88 அன்று மாலை 5.40 மணிக்கு நெல்லை எக்ஸ்பிரஸ் மூலம் நெல்லை ஜங்சனிலிருந்து துவக்கினோம். ஆசிரியர்களும், மாணவ மாணவியச் சகோதரரும் வாழ்த்தி வழியனுப்பப் பயணம் துவங்கியது.

22 . 9. 88 காலை சென்னையையடைந்து W.U.S - ல் தங்கி திருவான்மியூரிலமைந்த IMPCOPS — ஐப்பார்த்துவரச் சென்றோம். அங்கு இந்திய முறை மருந்துகள் மூலிகைத் தேர்ந்தெடுத்தல் முதல் தூய்மை செய்து மருந்தாக்கி 'பேக்கிங்' செய்வது வரை பார்த்து, அங்குள்ள தர நிர்ணய சோதனைச் சாலையையும் கண்டு, நமது மருந்துகளின் செய்முறையில் — மூலப்பொருள் தேர்ந்தெடுப்பதில் — உள்ள சில நுட்பங்களைத் தெரிந்து அறிவுக்கு விருந்தாக்கிக் கொண்டோம். Impcops ஐப்பார்வையிட Dr. A. ஆனந்த குமார் அவர்கள் உதவினார்கள். அன்றுமாலை 7. 15 மணிக்கு ஹைதராபாத் நோக்கிய எங்கள் பயணம் பாட்டும் கும்மாளமுமாக சார்மினார் எக்ஸ்பிரஸ் மூலம் தொடர்ந்தது. 23 - 9 - 88 அன்று சென்று சேர்ந்து ஹைதராபாத்தில் Birla Mandir, Salar Jang Museum, Zoo, Charminar முதலியன பார்த்தோம்.

ஹைதராபாத்தின் பிர்லா மந்திர், ஒவ்வொருவரும் தன்வாழ்வில் ஒரு நாளாவது பார்க்க வேண்டிய ஓரிடம். மன அமைதி தரக்கூடிய தெய்வ ஆலயங்களை ஹைதராபாத் ஜெய்ப்பூர், டெல்லி, காசி முதலான இடங்களில் நிர்மாணித்து திரு பிர்லா அவர்கள் நீங்காப்புகழ் பெற்றுள்ளார். பளிங்கை இழைத்துக் கட்டப்பட்ட வெண்மைக் கோவிலும், பளிங்குத் தெய்வங்களும் கண்களில் என்றென்றும் நிற்கக் கூடியது. சிறுகுன்று ஒன்றின் மேல் அமைந்த இந்தக் கோவில் இரவு விளக்குகளின் வெளிச்சத்தில், நகரின் தொலைவினின்று பார்க்கும் போது வெண்ணிலவை வெட்டிவந்து துடைத்தெடுத்த சிற்பம் போல் ஒரு தோற்றம் ..........

ஹைதராபாத்தின் ஸாலர்ஜங் பொருட்காட்சி அரிதான ஒன்று, அபூர்வமான பல கலைப் படைப்புகளை 18, 19 ம் நூற்றாண்டில் தலைமையமைச்சராயிருந்த ஸாலர்ஜங் என்பவர் தன் சொந்த முயற்சியில் சேர்த்து இதனை உருவாக்கியுள்ளார். அங்குள்ள அபூர்வ பிரெஞ்சுச்சிலைகள் ஒவ்வொன்றும் நம்மை ஆச்சரியத்தின் எல்லைக்கே இட்டுச் செல்பவை. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு கதை சொல்லும்: வித்தியாசமானவை; அபூர்வமானவை.

காலம் செய்த புண்ணியத்தால் ஹைதராபாத்தில் நடைபெறும் விநாயக உத்ஸவம் பார்க்கும் பேறுபெற்றோம். பெரிய பெரிய சைஸுகளில், விதவிதமான போஸ்களில், வித்யாசமான தினுசுகளில் விநாயகரை செய்து ஆராதித்து ஊர்வலமாய்ச் சுற்றிவந்து ஏரியில் போடும் காட்சி வினோதமானது. அங்குள்ள இந்த கலாச்சார நிகழ்ச்சி மறக்க முடியாதது. இந்த விநாயக உத்சவம்தான் எங்களது பெரும்பாலான பயண இடங்களை தவிர்க்கும் படியும் மருத்துவ நிலையங்களைப் பார்வையிட முடியாதபடியும் செய்தது என்பது வேறு விஷயம்.

24 - 9 - 88 மாலையில் புறப்பட்டு 25 - 9 - 88 மதியம் பம்பாயை அடைந்தோம். இடைவழியை ரயில் 32 குகைகளுக்குள் புகுந்து கடந்து செல்வது ரம்யமானது. பம்பாயில் 3 நாள் தங்கியிருந்து சுற்றுலாப் பேருந்து மூலம் Gate way of India, World Trade Centre, Nariman Point, Marine Drive, Chowpathy Beech, Kamala Nehru Park, Boot House, Hanging Garden, Zoo, Zuhu beech, Elephanta Caves முதலியன பார்த்தோம்.

கடலுக்குள் 10 மைல் தொலைவிலமைந்த ஒருதீவில் உள்ள Elephanta caves தனியாக சிறப்புப்படகில் சென்றுவந்த பயண அனுபவம் அலாதியானது. பயணத்தின்போது கடற்கரையில் தெரிகின்ற எல்லாக் கட்டடங்களும் நெட்டைநெட்டையாய் வானளாவ நிற்பதும் கப்பற்படைக் கப்பல்களும், எண்ணெய்டாங்குகளும் அணிவகுத்துநிற்பதும் ஒரு சிறப்பானகாட்சி எலிபெண்டாகுகையில் காணப்படும் மும்மூர்த்திகள் சிலை, கந்தர்வர் சிலைகள், கணபதி முருகன் சிலைகள் அழகானவை. அவை 7-ம் நூற்றாண்டில் நிர்மாணிக்கப்பட்டு 18-ம் நூற்றாண்டில் அந்நிய தேசத்தவர்களால் சேதப்படுத்தப்பட்டும் இப்போதும் காண்பதற்கழகாயுள்ளது. 19-ம் நூற்றாண்டில் பிரெஞ்சு, டச்சு வீரர்கள் அங்குள்ள சிலைகளையே குறிகளாக வைத்து துப்பாக்கிச் சண்டை பயின்றார்களாம்.

பம்பாயின் காலைநேர சுறுசுறுப்பும் நாளைக்கே இறந்துவிடுகிறார்போல ஓடியாடி வேலைசெய்யும் மக்களும், இரவின் அமைதியும் உற்சாகமானவை; வியப்பானவை. பம்பாயின் லோக்கல் ரயில் போக்குவரத்து நகரின் இதயமாக அமைந்துவிட்டுள்ளது. பம்பாயின் Juhu beech காதலர்களின் கந்தர்வ லோகம்.

17 . 9 . 88 மாலையில் புறப்பட்டு 28 . 9 காலை ஆமதாபாத் அடைந்தோம். மகாத்மா பிறந்த மாநிலமான இங்கு பூரண மதுவிலக்கை கடைப்பிடித்து வருவது மனதுக்கு மகிழ்ச்சி தருகிறது. தலைநகர் காந்திநகரில் தங்கினோம். காந்திநகர்த் தலைமையகக் கட்டிடங்களையும் சபர்மதி ஆஸ்ரமத்தையும் பார்த்தோம். மகாத்மா தன் வாழ்வின் பெரும்பகுதியைக் கழித்த சபர்மதி ஆஸ்ரமம் நகருக்கு புகழையும் அமைதியையும் சேர்க்கிறது.

29 . 9 . 88 காலைபுறப்பட்டு 30. 9. 88 விடியலில் ஜெய்ப்பூரை அடைந்தோம், அன்றைக்கே ஆட்டோ ரிக்ஷாக்களின் மூலம் ஜெய்ப்பூர்செயற்கைக் கால் தயாரிக்கும் மருத்துவமனை, City place, Jandar Mandar, Hawa Mahal, Amber fort, Reihar fort, Jal Maoai. Seezh Mahal Birla Mandir, The Big Canon on wheel முதலியன பார்த்தோம்.

ஜெய்ப்பூர் Pink city என அழைக்கப்படுவதற்கிணங்க செம்மைநிற சோலையுடன் காணப்படுகிறது மாவீரர்களான இராஜபுத்திரர்களின் நகரமாய் பலகாலம் விளங்கிய ஜெய்ப் பூரின் கோட்டைகளும் அரண்மனைகளும் பிரமாண்டமானவை. ரெய்கார் ஆம்பர் எனும் இரு கோட்டைகளும் நகருக்குள் எந்த எதிரியும் நுழைந்துவிடாதபடி பாதுகாப்புதருபவை. ரெய்கார் கோட்டைமீதுள்ள பீரங்கிவண்டி உலகின் மிகப்பெரிய பீரங்கிவண்டியாகும். இதன்சுடுதிறன் 25 Km தூரமாம். இதனை சோதனைக்காக வென்று ஒருமுறை மட்டுமே பயன்படுத்திப் பார்த் துள்ளனர்,

இங்குள்ள கண்ணாடி மாளிகை (Sheeze mahal) காற்று மாளிகை (Hawa mahal) இரண்டும் வியப்புக்குரியன. காற்று மாளிகையில் எங்கிருந்து இத்தனைக்காற்றும் வருகிறது என அறியாதபடி காற்று வீசும்.

ஜந்தர் மந்தர் என்பது ஒரு காலக்கணிப்புஇடம். இதனை ராஜபுதன அரசர் ஒருவர் நிர்மானித்துள்ளார். டெல்லி மதுரா, காசி, உச்சயினி ஆகிய இடங்களிலும் இவர் நிறுவிய ஜந்தர் மந்தர்கள் உள்ளதென்றாலும் இன்றைக்கும் பயன்படுத்தப்படும் ஒரே இடம் ஜெய்ப்பூர் ஜந்தர் தான். சூரிய, சந்திர ஒளிக்கிரணங்கள் படும் சாய்வினைக் கொண்டே, மாதம், மணி, நாளிகை வினாடி இவற்றைத் துல்லியமாய் கணிக்க முடிகிறது. ஜெய்பூரில் பிர்லாமந்திர் நிர்மானப்பணியில் தான் இன்றும் உள்ளது. இந்தக் கோவில் வெண்சலவைக்கல்லில் வடிக்கப்பட்டு வருகிறது.

1—10 அன்று விடியலுக்குமுன் புறப்பட்டு அன்று காலை ஆக்ரா அடைந்தோம். வேன் ஒன்றின் மூலம் முதலில் பதேபூர் சிக்கிரியை பார்க்கச் சென்றோம். அக்பரால் நிர்மானிக்கப்பட்டு அவரது காலத்திலேயே பேய் நகர் என்னும் பெயர்கொண்டு அவருக்குப் பின் வந்த ஒருவராலும் கண்டுகொள்ளாமல் பாழடைந்த ஒருநகர். இந்த இரட்டைநகரில் அமைந்த புலன்தர் வாஜா என்னும் யானை வாயில் உலகின் மிகஉயர்ந்த வாயிலாகும்.

சலிம் ஸேஸ்தி கல்லறை, திவான் - இ - ஆம், திவான் - இ - காஸ் பாஞ்ச்மகால், ஹிரன் மினார் முதலானவை காணவேண்டியவை. பாஞ்ச் மகால் 4, 8, 16, 32, 64 என்னும் எண்ணிக்கை யில் மேலிருந்து கீழாக தூண்கள் பெற்ற 5 அடுக்கு கட்டடம். இங்கு அக்பரின் 3 வெவ்வேறு மத (இந்து, முஸ்லீம். கிறிஸ்தவர்) மாணவியரும் தங்கள் தங்கள் புனித வழிபாடுகளை மேற்கொள் வராம். இவற்றைப் பார்த்து விட்டு ராதாஸ்வாமிகளுக்காக ஒரு நூற்றாண்டாக கட்டப்பட்டு வரும் கல்லறைக் கோவிலைப் பார்த்து விட்டு ஆக்ரா கோட்டை வழியாக உலக அதிசயம் ஒன்றைக் காணச்சென்றோம்.

தாஜ்மகால் - அந்த பெயரே ஒரு தனிச் சௌந்தர்யம். சலவைக் கற்களைக் கொண்டு தன் காதலிக்காக கல்லறையை யமுனைக் கரையில் ஷாஜகான் கட்டிவைத்துள்ள அந்த வசந்த மாளிகை, உலகின் பல்வேறு இதயத்தவரும் வந்து ரசித்துச் செல்லும் ஒரு கனவுக் கோட்டை யாகத்தான் அதனைக் காணும் வரை மனதை அரித்துக் கொண்டிருந்தது. இந்தியாவுக்கு சரித்திரப் புகழ் தேடித்தரும் அந்த தாஜ்மஹாலைக் கண்டபோது உணர்ச்சிகளின் உச்சநிலையை ஒவ்வொரு வரும் அடைந்தோம். ஓங்கிய நான்கு மினார்கள், அதன் நடுவில் காதல் என்பதன் சின்னமாய் —மணவாழ்வு என்பதன் அர்த்தமாய்—கம்பிரமான அழகான கட்டிடம்; ஒருபுறம் யமுனையின் பிர வாகம்; மறுபுறம் மாந்தரின் கும்பல் — அமைதியான தாஜ் — அதைச்சுற்றி பசுமை போர்த்தும் தோட்டம்; கண்பெற்றதன் பயனை உணரமுடிந்தது.

காவலர்கள் துரத்தியடிக்கும் வரை அங்கேயே நாங்கள் சுற்றிச்சுற்றி வந்துகொண்டிருந் தோம். உலகின் பல்வேறு மூலையினின்றும் அங்கு வருகிற மனிதர்களைப் பார்வையால் பருகி மகிழ்ந்தது தனிக்கதை.

